உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

## திருநாவுக்கரசு சுவாமிகள்

அருளிச்செய்த

# தேவாரப் பதிகங்கள்

(௪, ௫, ௬ - திருமுறைகளடங்கிய அப்பர் தேவாரம்)



சைவ சித்தாந்த மகா சமாஜம்

"திருவருளகம்" 22-ஏ., கல்லுக்காரத் தெரு

மயிலாப்பூர், சென்னை

மூன்றாவது பதிப்பு

விஷு௵ சித்திரை மீ



1941

தனிப்பிரதி விலை ரூ. 1
எட்டு பிரதிகள் ரூ. 7½

# முன்னுரை

சைவ சித்தாந்த சமாஜத்தினர் சென்ற 1930, 1935-ம் ஆண்டுகளில் திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரத்தை வெளியிட்டனர். அவைகள் முற்றும் செலவாகி பல திங்களாயின. திருநாவுக்கரசர் தேவாரத்தில் அடியேனுக்கிருந்த அவாவினால், சமாஜக் காரியதரிசியவர்களின் விருப்பத்துக்கிணங்க அப்பர் சுவாமிகள் தேவாரத்தை முன்புபோலவே அடக்கவிலைப் பதிப்பாகப் பதிப்பித்து, சித்திரைச் சதயத் திருநாளாகிய இன்று (21-4-1941) திருவதிகை வீரட்டானேசுவரர் திருமுன்பு வெளியிடத் துணிந்தேன். அடியேன் பலநாள் சைவத் திருமுறைகளைத் தவிராது பாராயணம் செய்துவந்த பலனே அடியேனை இத்திருப்பணியில் புகச் செய்ததோடு பல நல்லார் இணக்கத்தையும் கூட்டுவித்தது. ஆதலால் சைவ நன்மக்கள் அனைவரும் தினந்தோறும் சைவத் திருமுறைகளைப் பாராயணஞ்செய்து நமது முக்கட்பரமன் திருவருளை அடைவார்களென வேண்டுகிறேன்.

எனது நற்றுணையாய் எனக்கு எந்தையுமாய் உள்ளவர்களின் நினைவாக, சைவத் திருப்பணி ஏதேனும் ஒன்று செய்தல் வேண்டுமென்று அடியேன் பலகாலும் நினைத்ததுண்டு. ஆனால் அடியேன் குடும்பத் தொல்லையாலும், அற்ப வருவாய் உடையேனாதலினாலும் உடனே செய்ய இயலாது போயிற்று. பின் அடியேன் ஜனனபூமியாகிய திருத்துறையூரில் எழுந்தருளியிருக்கும் தவநெறியுடைய நாயனாராம் முன்னவரது அருள்நாடி நின்றேன். முன்னவனே முன்னின்றால் முடியாத செயல்கள் இல்லையாதலால் அடியேன் எதிர்பாராத விதமாக இந்நூல் முற்றுப்பெற்று அடியேனது தாய் தந்தையர்களின் நினைவு மலராக வெளிவந்தது. இவ்வாறு வெளிவர விடைகொடுத்த சமாஜத்திற்குப் பெரிதும் கடமைப்பட்டுள்ளேன். இனி இத்தேவாரம் சதயத்திருநாளில் வெளிவர விரைவில் அச்சிட்டுதவிய சாது அச்சுக்கூடத்தினருக்கும், அச்சுத்தாள்களைப் பரிசோதித்துதவிய அன்பர்களுக்கும் எனது வணக்கம் தெரிவித்துக் கொள்கிறேன். முடிவாகத் தற்போது நிகழும் போர்க் காரணமாகக் காகிதம் முதலியவைகள் விலையேறப் பெற்றிருப்பினும், எளிதில் பலரும் வாங்கி உபயோகிக்கவேண்டி முன்பு போலவே விலையிடப்பட்டது. மற்றும் சைவ நன்மக்கள் அனைவரும் இதுபோன்ற திருப்பணியில் ஈடுபடுமாறு திரிபுரமெரித்த அவிர்சடைக் கடவுளின் திருவடிகளை மன மொழி மெய்களால் வணங்குகிறேன்.

திருத்துறையூர் - கு. ஆறுமுகன்

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# பதிப்புரை

திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம் நமது சமாஜத்தின் மூன்றும் பதிப்பாக இன்று வெளிவருகின்றது. திருவாளர் சி. கே. சுப்பிரமணிய முதலியாரவர்கள் சரித்திரம் அரும்பொருளகராதி முதலியவற்றிற் சேர்த்தற்குரிய பல கருத்துக்களை அவ்வப்போது தெரிவித்தார்கள். திருவாளர் ரா. சண்முகசுந்தர செட்டியாரவர்கள் தமது ஆசிரியரும் திருமுறையாராய்ச்சி வல்லுநருமாகிய கயப்பாக்கம் திரு. சதாசிவ செட்டியார் அவர்களிடமிருந்து தெரிந்து கொண்ட பல நுட்பங்களை அரும்பொருளகராதியுட் சேர்த்துதவியதோடு அச்சுத்தாள்களையும் பரிசோதித்தனர். இப்பரிசோதனையில் திரு. மு. அருணைசலம் பிள்ளையவர்கள், எம். ஏ., ஏட்டுப் பிரதிகளிற் கிடைத்த பல அரிய பாடங்களைக் குறித்து உபகரித்தனர். வழக்கம் போல் சாது அச்சுக்கூடத்தினர் மிகச் செம்மையாகவும் திருத்தமாகவும் விரைவாகவும் அச்சிட்டு முடித்தனர். "இளையானடக்கம் அடக்கம் கிளைபொருளில்லான் கொடையே கொடைப்பயன்" என்ற நாலடியார் வாக்குக்கு இலக்கியமாகிய சைவ இளைஞர் திரு. தி. கு. ஆறுமுக நாயனாரவர்கள் இப்பதிப்புக்குரிய செலவை முன்பணமாகத் தந்துதவியது பெருஞ் செல்வர்களை 'எற்றே இவர்க்கு நாம்' என்று வியப்புறச் செய்யும். இவ்வாறு தொண்டு புரிந்து பதிபுண்ணியத்திற் பங்குபெற்ற மேற்கூறிய சிவநேயச் செல்வர்கட்கெல்லாம் நமது சமாஜம் மனப்பூர்வமான நன்றி செலுத்துகின்றது.

இப்பதிப்பு திருநின்ற செம்மையே செம்மையாக் கொள்ளுமாறு நமக்கருள்புரிய அதிகையண்ணலை வழுத்துகின்றேன்.

திருவதிகைவீரட்டானம்
விஷு௵ சித்திரை௴ ௮௳
சதயத் திருநாள்
21-4-1941

இங்ஙனம்
ம. பாலசுப்பிரமணியன்
காரியதரிசி
சைவ சித்தாந்த மகா சமாஜம்

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# உள்ளுறை

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# திருநாவுக்கரசு சுவாமிகள் சரித்திரம்

"இடையறாப் பேரன்பும் மழைவாரும் இணைவிழியும்
உழவாரத்தின்
படையறாந் திருக்கரமும் சிவபெருமான் திருவடிக்கே
பதித்த நெஞ்சும்
நடையறாப் பெருந்துறவும் வாகீசப் பெருந்தகைதன்
ஞானப் பாடல்
தொடையறாச் செவ்வாயும் திருவேடப் பொலிவழகும்
துதித்து வாழ்வாம்" —சிவஞான சுவாமிகள்

திருநாவுக்கரசு சுவாமிகள், திருஞானசம்பந்த சுவாமிகள், சுந்தரமூர்த்தி சுவாமிகள், மாணிக்கவாசக சுவாமிகள் என்னும் நால்வரும் சைவசமய ஆசாரியர்கள். அவர்கள் அனைவரும் சிவபெருமானைத் தம் அனுபவத்தில் நேரே கண்டு பேரின்பப் பெருவாழ் வெய்திய சிவஞானிகள். இறைவன் திருவுள்ள மிருந்தபடி, அவனை அடையும் மார்க்கங்களில் ஒவ்வொன்று ஒவ்வொருவர் வாயிலாக உலகில் சிறப்புவகையில் விளங்குவதாயிற்று. இப்பெருமக்கள் சரித்திரங்களை உற்று நோக்கினால், தாசமார்க்கம், சற்புத்திரமார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் என்னும் நான்கு மார்க்கங்களும் முறையே, திருநாவுக்கரசு நாயனார் முதலிய நால்வர் வாழ்க்கையாலும் விளக்கப்பெறும் உண்மை புலனாகும். இவர்களுள் திருநாவுக்கரசரும் திருஞானசம்பந்தரும் கி. பி. 7-ம் நூற்றாண்டில் திகழ்ந்தவர்கள். அவர்கள் காலத்தில் நடுநாட்டையும் தொண்டை நாட்டையும் முதலாம் மகேந்திரன் என்னும் பல்லவ அரசன் ஆண்டுவந்தான். (கி. பி. 600 - 680) அந்நாளில் நிலையிருந்த சமணமும் புத்தமும் தமிழ் நாட்டின் பல பாகங்களிற் பரவிச் சைவ சமயத்தை நலி

வுறுத்திக் கொண்டிருந்தன. அவற்றால் விளைந்த பெருங்கேட்டினின்றும் சைவ சமயத்தைக் காப்பாற்றியருளிய பெருமை இவ்விருவருடையதாகும்.

இவர்களுள் திருநாவுக்கரசு நாயனார், தமிழகத்தில் திருமுனைப்பாடி நாட்டில், திருவாமூரில், சைவ வேளாளர் மரபில், குறுக்கையர் குடியில், கி. பி. ஆறாம் நூற்றாண்டின் பிற்பாதியில் திருவவதாரஞ் செய்தார். அவர் தந்தையார் பெயர் புகழனார்; தாயார் பெயர் மாதினியார். இவர்கள் அவருக்கிட்ட பெயர் மருள்நீக்கியார் என்பது. அவருக்குத் திலகவதியார் என்னும் அருமைத் தமக்கையாரொருவருண்டு. இவ்வம்மையாருக்கு வயது பன்னிரண்டானபோது, இவரைச் சிவ பக்தியிற் சிறந்த கலிப்பகையார் என்னும் சேனாபதி ஒருவருக்கு மணஞ்செய்விக்க அவ்விரு குடும்பத்துப் பெரியோரும் இசைந்திருந்தார்கள். அப்போது கலிப்பகையார் அரசனுக்காகப் போர்மேற் செல்ல நேர்ந்தது. அதில் அவர் பூதவுடம்பை யிழந்து புகழுடம்பைப் பெற்றார். அதற்குள் திருவாமூரிலே புகழனாரும் சிவபதமடைந்தார். கற்பின் மேம்பட்ட அவர் மனைவியாரும் தம் முயிரை அவருயிரோடு சேர்க்க விரும்பி உடன்கட்டை யேறிவிட்டார்.

தமக்குத் திருமணவினை யின்னும் நடவாவிடினும், தந்தை தாயர் தம்மை அவருக்குக் கொடுக்க இசைந்ததனால் கலிப்பகையாரைத் தமது கணவனாரெனக்கொண்டு, திலகவதியார் தம் தாயாரைப் போன்றே தாமும் உயிர்துறக்கத் துணிந்தார். அவ்வாறு செய்தால் தம்பியார் தம்முயிரையும் போக்கிக் கொள்வதாகக் கூறிய உறுதியை உணர்ந்து, அவர் பொருட்டாகத் திலகவதியார் உயிர் தாங்கி, இல்லத்திலேயே தவவொழுக்கம் பூண்டு, மணஞ்செய்து கொள்ளாது எல்லாவுயிர்க்கும் கருணைபூண்டு ஒழுகி, தம்மையே தாயுந் தந்தையுமாகக் கருதி நின்ற தம்பியாரைக் கல்வி யறிவொழுக்கங்களிற் சிறந்தவராக்கினார்.

மருணீக்கியார் தம் கல்வியின் பயனாக உலக நிலையாமையை நன்றாயுணர்ந்து பலவித தருமங்களைச் செய்துவிட்டுத் துறவு பூண்டார். அதனோடு, அக்காலத்தில் பரவியிருந்த சமணசமயத்தின்

உண்மையை அறிய விரும்பிப் பாடலிபுரத்திற்குச் சென்று, அங்குள்ள சமணக் குருமார்களது போதனைக்குள்ளாகி, அச்சமயத்தை மேற்கொண்டார். அவர் சமண சாத்திர அறிவிலும் ஒழுக்கத்திலும் மேம்பட்டுப் புத்தர்களை வாதத்தில்வென்று சமணத்தை விளக்கிய காரணத்தால் அவருக்குத் தருமசேனர் என்னும் பட்டம் சமணர்களால் தரப்பட்டது.

இப்படித் தம்பியார் சைவம்விட்டுச் சமணம் சார்ந்ததை யறிந்த திலகவதியார் சிந்தை நொந்து, திருவதிகைப் பதியையடைந்து, அங்கு வீரட்டானேச்சுரத்தில் எழுந்தருளி யிருக்கும் சிவபெருமானுக்குத் திருத்தொண்டுபுரிந்து வருவாராயினர். அப்படிச்செய்து வருகையில் பலநாளும், தம்பியார் சமணராய்க் கிடப்பதை நினைந்து மிக வருந்தி. அவரை அதினின்றும் மீட்டுக் காத்தருள வேண்டுமென்று வீரட்டானேச்சுரரைப் பன்முறையும் வேண்டினர். ஈசர் அவ்வம்மையார் கனவில் தோன்றி, தருமசேனரைச் சூலை நோயால் வருத்தி ஆண்டருளுவதாக உணர்த்தினர். இறைவன் "வேண்டுவார் வேண்டுவதே ஈவான்" என்பது ஓர் அருள் வாக்கன்றோ?

அவ்வாறே தருமசேனரைத் தடுப்பரியதொரு சூலைநோய் தொடர்ந்து முடுக்கியது. முயற்சி யொன்றும் பயன் தாராமையால் சமணர்கள் அவரைக் கைவிட்டு நீங்கினர்கள். பின்புஅவர் தம்நிலைமையைத் திலகவதியாருக்கறிவித்து அழைத்து வரும்படி சமையற்காரனை அனுப்பினர். நன்மை யறியாச் சமணர் வாழிடத்துக்குத் தாம் வர முடியாதென்று அம்மையார் மறுத்துச் சொல்லிவிட்டார்கள். பின்பு தருமசேனர் கைதருமாள் துணைக்கொண்டு, இரவில் திருவதிகையை யடைந்து, தமக்கையார் திருவடி பணிந்து, தாம் உய்யுமாறு அருளிச்செய்யும்படிவேண்டினர். திலகவதியாரும், 'அடியடைந்தோர் பற்றறுப்பானாகிய பரமசிவனைப்பணிந்து அவன் பணி செய்தலே உய்யுநெறி' என்று உபதேசித்தார்கள். அதை ஏற்றுக்கொண்டு வணங்கினர் தம்பியார். திலகவதியார் இறைவன் பேரருளை நினைந்து, மருணீக்கியார் திருவீரட்டானத்துட் செல்லவேண்டி யிருப்பது கருதி, சிவபெருமான் 'திருநீற்றை ஐந்தெழுத்தோதிக் கொடுத்தார்.' அவ்வத்தோடதை ஏற்று அணிந்துகொண்ட தம்பியார், தமக்கையாரைப் பின்

தொடர்ந்து சென்று வீரட்டானேச்சுரரை வணங்கி நின்றவளவில், அப்பெருமான் திருவருளால் தமிழ்மாலை சாத்துமுணர்வு தோற்றியது. தோற்றவே, அவர் 'கூற்றாயினவாறு' (4—1) என்னும் திருப்பதிகத்தைப் பாடிப் பரவசரானார். சூலைநோய் நீங்கியது. 'செந்தமிழ்ச் சொல் வளப்பம் மிக்க பதிகம் பாடினமையால், நாவுக்கரசு என்னும் நற்பெயர் நினக்கு எங்கும் வழங்குவதாக' என்று ஓர் அசரீரி பிறந்தது. உடன் பிறந்தாரிருவரும் உற்ற மகிழ்ச்சிக்கு அளவில்லை. சிவபெருமானுக்கு மனம் வாக்குக் காயம் மூன்றாலும் தொண்டு புரிய உறுதிகொண்ட திருநாவுக்கரசர், திருநீறும் கண்டிகையும் சிறக்க அணிந்து, சிவன் சேவடி மறவாச் சிந்தையராய் உழவாரப் படையும் தாங்கி உலவுவாராயினர். சைவசமயத்தினின்றும் புறச்சமயம் புகுந்த தம்பியாரை மீண்டும் சைவத்திற் சேர்க்க விரும்பிய தமக்கையார் அன்போடு திருநீற்றைத் திருஐந்தெழுத்தோதிக் கொடுத்ததேயன்றிப் பிறிதொரு பிராயச்சித்தமும் செய்யவில்லை. இறைவனும் உலகமும் அவருக்கு அஃதே சாலும் என்று அங்கீகரித்துக் கொண்ட இப்பெரிய உண்மை இங்கே குறிக்கற்பாலது.

இவற்றை யெல்லாம் அறிந்த பாடலிபுத்திரத்துச் சமணர்கள் தம் சமயத்திற்குக் கேடு வந்ததென்று தியில்கொண்டு, தம்மரசனாகிய மகேந்திர பல்லவனிடஞ் சென்று, 'தருமசேனர் தம் தமக்கையார் நெறியையே அடைய விரும்பி, சூலைநோய் வந்ததாகப் பொய்ச் சாக்குக் காட்டிச்சென்று சைவராகி நம் சமயங்களையும் தெய்வநிந்தனையும் செய்தனர். ஆதலால் அவருக்கு அதற்கேற்ற தண்டம் செயல் வேண்டும்' என்றார்கள். அதற்கிணங்கிய மன்னனும், நாவுக்கரசரை அழைத்து வருமாறு அமைச்சர்கட்குக் கட்டளை யிட்டான். அவர்களும் சேனைகளுடன் அதிகை சென்று அவரைக் கண்டு அரசனாணையைத் தெரிவித்தார்கள். அது கேட்ட சுவாமிகள் "நாமார்க்குங் குடியல்லோம்" (6—98) என்னும் அரும்பெரும் திருத்தாண்டகத்தைப் பதிலாய் அளித்தார்கள். பின்பு மந்திரிகள் அவரை வருமாறு வணங்கிப் பெரிதும் வேண்டினர். திருவருளை நம்பித் திருநாவுக்கரசர் பாடலிபுத்திரத்தில் மகேந்திரன் சபையை யடைந்தார்.

கொல்லா விரதமே தம் சமயத்தின் சிறந்த கோட்பாடென வறிந்தே கூறும் அமணர்கள் அறிவுறுத்தியபடி அரசன் திருநாவுக்கர சரை நீற்றறையி லிடுவித்தான். இட்டும் அவர் இறைவன் திருவடியையே தமது பற்றுகக் கொண்டு, "மாசில் வீணையும்" என்னும் பதிகம் பாடித் தியானத்தி லினிதிருந்தார். ஏழுநாள் கழிந்த பின் நீற்றறைக் கதவைத் திறந்து பார்க்க, அவர் ஒருவனமுமில்லாமல் ஆனந்த வடிவினராய்த் திகழ்ந்ததை அரசன் முதலியோர் கண்டார்கள். கண்டும், அவருண்மை நிலையை அறியமாட்டாது, சமண அடிகள்மார் அவருக்கு நஞ்சு ஊட்ட வேண்டுமென்று அரசனுக்கு ஆலோசனை கூறினர். அப்படியே வஞ்சனைப்பாற் சோறுக்கி நஞ்சு தந்தனர். அதை அமைதியாய் உண்டனர் நம் சமய குரவர். நீலகண்ட னருளால் நிலை கலங்காது அன்பும் அருளும் திகழ விளங்கினர். இவற்றைக் கண்டும் மனந்திரும்பாத பொய்ச் சமண முனிவர்கள், யானையை ஏவி அவரைக் கொல்லுவிக்கும்படி வேந்தனுக்குக் கூறினர். அவ்வாறே மதிகலங்கிய மன்னனும் ஏவினன். ஆனை உரிபோர்த்த அரன் கழலை நெஞ்சத் திருத்திய அடியார், "சுண்ணவெண் சந்தனச் சாந்தும்" என்னும் பதிகம்பாட (4—2) அவ் யானை அவரை வலம் வந்து பணிந்து திரும்பிச்சென்று, தன்னை ஏவிய கொடியோரைக் கொல்லத் தொடங்கியது.

இனியும் நாவுக்கரையர் நம்மிடமிருந்தால், நாசமே யாவோம் என்றெண்ணி வெருவிய சமணர்கள், அவரைக் கல்லிலோடு சேர்த்துக் கட்டிக் கடலில் தள்ளிவிடுவதே கடனெனக் காவலனிடம் கட்டுரைத்தார்கள். அவனும் அவ்வாறே செய்வித்தான். கல்லிலோடென்னைப் பூட்டிக் கடலிற் பாய்ச்சினும் நல்ல துணையாவது நமச்சிவாயவே என்று நாவுக்கரசர் உறுதியாய் மனத்துட்கொண்டு, "சொற்றுணை வேதியன்" (4—11) என்னும் பதிகம் பாடினர். கல்லே புணையாய் மிதக்க, நம்பெரியார் திருப்பாதிரிப்புலியூரில்* கரையேறினர். இந்த அதியற்புதச்செயல் அக்காலத்திற் பல்லாயிர மக்கள் நேரிற்கண்டது; வாக்கின் மன்னர் திருவாக்கினுலேயே

*இப்போது இது கரையேற விட்ட குப்பம் என்று வழங்கும்.

மெய்ப்பிக்கப்படுவது. தம்முயிருக்குப் பன்முறை சமணர் தீங்கு செய்ய முயன்றபோதும் தாண்டக வேந்தர், அவர்கள் மீது கோபமோ பகைமையோ கொள்ளாதிருந்ததும், திருவருள் தம்மை எப்படியும் காக்கும் என்று சிறிதும் நிலைகலங்கா திருந்ததும், அவரது அளப்பரும் மேன்மையையும் உறைப்பையும் உணர்த்துமன்றோ?

கடலினின்று கரையேறிய பெரியார் தமக்குச் தோன்றாத் துணையாயிருந்த இறைவனைப் பாதிரிப்புலியூராலயத்திற் கண்டு பதிகம் பாடிப் போற்றியபின், மீண்டும் திருவதிகை சேர்ந்தனர். அப்போது அவரைப் பெருமகிழ்ச்சியோடு எதிர்கொண்டழைத்த அதிகை வாசிகள் கண்ட அவர் கோலத்தைக் கீழ்வரும் பெரிய புராணச் செய்யுள் படம் பிடித்ததுபோற் காட்டும்.

"தூயவெண் ணீறு துதைந்தபொன் மேனியும் தாழ்வடமும்
நாயகன் சேவடி தைவருஞ் சிந்தையும் நைந்துருகிப்
பாய்வது போலன்பு நீர்பொழி கண்ணும் பதிகச்செஞ்சொல்
மேயசெவ் வாயும் உடையார் புகுந்தனர் வீதியுள்ளே"

திருஅதிகையில் பலநாள் தங்கித் திருத்தொண்டாற்றி வருகையில், மகேந்திர பல்லவன் உண்மை யுணர்ந்து, சைவ மெய்ச்சமயம் சார்ந்து, தன்பேரால் குணபரவீச்சரம் என்னும் கோயிலொன்றைத் திருவதிகையிலேயே கட்டுவித்தான்.

இப்பால் வாகீசர் சிவதலங்கள் பலவற்றையுங் கண்டு வணங்க விரும்பித் திருவெண்ணெய்நல்லூர் முதலிய நடுநாட்டுத் தலங்கள் சிலவற்றைத் தரிசித்துவிட்டுத் திருப்பெண்ணாகடம் அடைந்தார். அவ்வூரில் தூங்கானை மாடம் என்னும் திருக்கோவிலுக்குச் சென்று "பொன்னார் திருவடிக் கொன்றுண்டு விண்ணப்பம்" (4—109) என்னும் பதிகம்பாடி, இடபக்குறியும் சூலக்குறியும் சிவபெருமானருணையின்படி பூதமொன்றால் தம் தோளிற் பொறிக்கப் பெற்றார்.

பின்பு வாக்கின் மன்னர் சிதம்பர திருத்தலத்தை யடைந்து, திருச்சிற்றம்பலம் முடையாரைப் பன்னாள் பணிந்து, பாமாலைசூட்டி மகிழ்ந்திருந்தார். அங்கிவ்வா றிருக்கையில், சீகாழியில் ஆளுடைய பிள்ளையார் அம்மை திருமுலைப்பாலுண்டு திருஞானசம்பந்தராய்

விளங்குஞ் செய்தியைக் கேட்டார். உடனே பிள்ளையாரைக் காண வேட்கைகொண்டு சீகாழியை அணுகினார். திருநாவுக்கரசர் தம்மைக் காண வருகின்றதை யறிந்த திருஞானசம்பந்தர் என்னும் தெய்வக் குழந்தை, அன்பர் கூட்டத்தோடு நம்பெரியாரை எதிர்கொண்ட அளவில், "அப்பரே" என்று பேரன்போடு அவரை அழைத்தது. அது முதலாகத் திருநாவுக்கரசருக்கு "அப்பர்" என்னும் ஓரருமைத் திருநாமமும் வழங்கி வரலாயிற்று. பின்பு இருவரும் சீகாழியிலும் திருக்கோலக்காவிலும் இறைவனை வழிபட்டு மகிழ்ந்தார்கள்.

அப்பர், சம்பந்தரிடமிருந்து விடைபெற்றுக்கொண்டு, சோழ நாட்டு வேறு பல தலங்களை வணங்கிச் சென்று, திருச்சத்திமுற் றத்தை யடைந்தார். அங்கு "கோவாய் முடுகி" (4—96) என்னும் பதிகத்தில் இறைவனடிச் சுவட்டைத் தமது முடிமேற் பொறித் தருள வேண்டுமென்று விண்ணப்பித்தார். இறைவனாணைப்படி அவர் நல்லூர் சேர்ந்ததும் அவ்வேண்டுகோள் நிறைவேற்றப்பட் டது.

பின்பு திருவையாற்றுக் கணித்தாயுள்ள திங்களூர் சேர்ந்தார் திருநாவுக்கரசர். அவ்வூரில் அப்பூதியார் என்னும் அந்தணரொரு வர் இவர் பெருமையைக் கேள்வியா லுணர்ந்து, இவரையே தமது ஆசாரியராகக் கொண்டு, தமது மைந்தர் முதலியோர்க்கும், தாம் செய்த பல்வகைத் தருமங்கட்கும் இவர் பேரையே அமைத்து அன்பு செலுத்திக் கொண்டிருந்தார். இவ்வுண்மையைத் திங்களூரை யடைந்த பின்பே அப்பர் அறிந்தார். அப்பூதியார் வீட்டிற்கு அப்பர் எழுந்தருளியபோது, தாம் போற்றும் திருநாவுக்கரசரே வந்தவர் என்று அவ்வந்தணர் அறியவில்லை. யாரோ ஒரு சிவனடியார் என்று கொண்டு வழிபட்டுநின்ற நிலையில், (அப்பரும் அவரும் சொல்லாடிய விவரம் அன்பர்க்குப் பேரின்பம் விளைக்கும். தாம் நாளும் ஏத்தும் அப்பரே அவரெனப் பின்னரறிந்துகொண்ட) அந்தண திலகர், அள விலா மகிழ்ச்சி கொண்டு போற்றி, ஆளுடைய அரசரைத் தம்மில் லத்தில் திருவமுது செய்விக்க எண்ணி ஆயத்தஞ் செய்கையில் அவரது பெரிய பிள்ளையாகிய மூத்த திருநாவுக்கரசு, அடியார் திரு வமுது செய்தற்கு வேண்டிய வாழைக் குருத்தை அரியப் புறக்

கடைக்குச் சென்றான்; அரிகையில், பாம்பு தீண்டப்பெற்றான்; விடம் தன்னைக் கொல்லுமுன், குருத்தைத் தாயாரிடம் சேர்த்து விட்டு உயிர் நீத்தான். தாய் தந்தையர் இதையறிந்தும், அடியார் திருவமுது செய்தலில் தவக்கம் நேரலாகா தென்றும் அன்பும் திண்மையும் உடையராய், இறந்த மகனுடம்பை ஒரு பாயிற் சுருட்டி வீட்டின் புறத்திற் கிடத்திவிட்டு, அப்பரைத் திருவமுது செய்தருள அழைத்தார்கள். வணங்கினோர்க்குத் திருநீறு தருஞ்சமயத்து அப்பர், மூத்த திருநாவுக்கரசைப்பற்றிக் கேட்டு, உண்மை யறிந்து கொண்டார். அப்பூதியாரும் அவர் அருமை மனைவியாரும் கொண்டிருந்த அடியார் பத்தியை அப்பர் வியந்து பாராட்டி, அங்கிருந்தோர் சிவனாலயத் தெதிரே இறந்த மைந்தனுடலத்தைக் கொணரச் செய்து, "ஒன்று கொலாம்" (4—18) என்னும் பதிக மோதியருளினார். இறந்த மைந்தன் உயிர்பெற்றெழுந்தான். பின்பு அப்பூதியாரும் மைந்தரும் தம்மருகிருக்க, அப்பர் திருவமுது செய்தருளினார். சமய உணர்வும் ஒழுக்கமும் விஞ்சிய விடத்துச் சாதி மறைந்தொழிந்துபோ மென்பதற்கு இந்த மெய்ச்சரிதம் ஒரு சான்றாகும்.

அப்பர் காவிரிக்கரையிலுள்ள சிவதலங்களைத் தரிசித்துக் கொண்டு திருவாரூரை யடைந்து அங்குப் பலநாள் தங்கி, அதற் கருகிலுள்ள தலங்கட்குச் சென்று பணிந்து வந்தார். பின்பு திருப் புகலூருக்குவர, அங்கு முன்னமே முருகநாயனார் திருமடத்தில் தங்கி யிருந்த திருஞானசம்பந்தர் இவரை எதிர்கொண்டார். திருவாரூர்த் திருவாதிரை விழாவின் சிறப்பை அப்பர் திருஞானசம்பந்தர் வாக்கா லுணர்ந்தார். உடனே அங்குச் சென்று தியாகேசரை வணங்கிப் பின்பு புகலூர் திரும்பினார். சிறுத்தொண்டர், திருநீலநக்கர் முதலிய சீரிய அடியார்களும் வந்துசேர, அன்பர் திருக்கூட்டம் பேரின்பத்தில் மூழ்கியிருந்தது.

பின்பு அப்பரும் சம்பந்தரும் ஒன்றுசேர்ந்து பல தலங்கட்கு யாத்திரைசெய்து, திருவீழிமிழலையை யடைந்தார்கள். அதுகாலை மிழலை நாட்டில் பஞ்ச மேற்பட்டமையால் அடியார்கள் வருந்துவதைக் கண்டு அடியார்க்கும் கவலை வருமோ என்று இறைவனை நினைந்து துயின்றனர் சைவத்தின் கண்ணனைய சம்பந்தரும் அப்

பரும். அதனை யுணர்ந்த விழிமிழலைநாதர் அப்பெரியார்கள் கனவில் தோன்றி, திருக்கோயிலிற் கிழக்கும் மேற்குமுள்ள பலி பீடங்களில் பொற்காசு நாடோறும் இருவருக்கும் வைத்தருளுவதாக உணர்த்தினர். சம்பந்தர்க்கு வைக்கப்பெற்ற காசு வாசியுடையதா யிருந்தது. கைத்தொண்டு செய்யும் அடியவரான அப்பர்க்கருளிய காசு வாசியில்லாததா யமைந்தது. அதுகண்டு மகிழ்ந்த சம்பந்தர், பதிகம் பாடி வாசி தீர்ந்த காசு நல்கப்பெற்றார். அக்காசு கொண்டு அடியார்கட்கு உலகம் பசிதீர்ந்தது; பஞ்சமும் தீர்ந்தது.

பிறகு பல தலங்களைத் தரிசித்துக் கொண்டு நம்பெருமக்களிருவரும் திருமறைக்காட்டை யடைந்தார்கள். அங்குள்ள சிவமூர்த்தியை வேதங்கள் பூசித்த பண்டைக்காலந் தொடங்கி அது வரை மூடப்பட்டிருந்த கோயிலின் திருக்கதவைத் திறக்கப் பாடும்படி சம்பந்தப்பெருமான் அப்பர்க்குச் சொல்லியருளினர். அவராணையின்படி அப்பர் பெருமானும், "பண்ணினேர் மொழியாள்" (5—10) என்னும் பதிகம்பாடிக் கதவத்தை அரிதில் திறப்பித்தார். திருவாய்மூர்ச்செல்வனார் அவரைத் திருவாய்மூருக்கு வரும்படி கனவிற் பணித்து அவர் முன்செல்ல, அப்பர் பின் தொடர்ந்து அவ்வூரை யடைந்தார். அடைந்ததும் இறைவர் மறைந்தார். சம்பந்தரும் அவ்வூர் வந்தடைந்தார். இருவருக்கும் சிவபெருமான் காட்சி தந்தருளினர்.

திருவாய்மூரிலிருந்து திருமறைக்காடு திரும்பி, இருவரும் வதிந்து வருகையில், பாண்டி நாட்டிலிருந்து மங்கையர்க்கரசியாரால் அனுப்பப்பட்ட சிலர் சம்பந்தரைக் கண்டு, அந்நாட்டை மூடியிருந்த சமண இருளையகற்றிச் சைவவொளியைப் பரப்புதற்காக அங்கெழுந்தருள வேண்டுமென்று அவரை வேண்டினார்கள். சம்பந்தர் அதற்கிசைந்து புறப்படுகையில், அப்பர், சமணருடைய பொல்லாங்குகளை எடுத்துக்காட்டிச் சமண் தீர்க்க அங்குத் தாமே போய்வருவதாய்ச் சொல்லிப் பார்த்தார். சம்பந்தர் இணங்கவில்லை. கோள்கள் வலியுடையனவாயில்லை என்று கூறினார். பிள்ளையார் அதையும் தடையாய்க் கொள்ளவில்லை. பின்பு, உடன் வருவதாக உரைத்தார் அப்பர். அதையும் பிள்ளையார் அங்கீகரியாது அப்பரைச் சோழநாட்டி

லேயே இருக்கும்படி நிறுத்திவிட்டு விடைபெற்று மதுரையை நோக்கிப் புறப்பட்டுவிட்டார்.

பின்பு திருநாவுக்கரசர், திருநாகைக்காரோணம் முதலிய தலங்களை வணங்கிக்கொண்டு பழையாறை வடதளி வந்தடைந்தார். அங்கிருந்த சமணர்கள், சிவாலயத்தைச் சிவலிங்கம் தெரியவொட்டாது மறைத்து, அதைத் தம் பள்ளியாக்கி வைத்திருந்தனர். சிவலிங்கப் பெருமானைத் தரிசித் தல்லது உண்பதில்லை யென்று அப்பர் உண்ணா விரதங்கொண்டு கிடந்தனர். இறைவன் சோழ அரசனுக்கு இந்நிலைமையைக் கனவி லுணர்த்த, அரசன், சமணர் சூழ்ச்சியை மாற்றி அப்பருக்குச் சிவலிங்க தரிசனங் கிடைக்கப்பண்ணினான். அப்பர் "தலையெலாம் பறிக்கும் சமண்" (5—58) என்னும் பதிகம் பாடி மகிழ்ந்து வணங்கிப் பின் பல தலங்களைப் பாடிச்சென்று திருப்பைஞ்ஞீலியை யடைந்தார்.

அவ்வூருக்கு வழிநடந்து செல்லும் அப்பர் மிக இளைத்துப் பசியாலும் நீர்வேட்கையாலும் வருந்தினார். வருந்தினாலும் அதற்கு மனமலையாமல் செல்ல, அவர் வருத்தத்தை நீக்கத் திருவுளங்கொண்ட பைஞ்ஞீலிச் சிவனார், சைவ வேதியர் கோலங்கொண்டு பொதிசோற்றோடு அப்பர் வரும் வழியில் ஓர் அழகிய சோலையிற் காத்திருந்து, சோறும் நீருந் தந்து அவரது இளைப்பை மாற்றி, அவரோடு திருப்பைஞ்ஞீலி வரை சென்று மறைந்தார். தனது மெய்யடியார் வருந்த ஆண்டவன் பார்த்திருப்பானோ? இரானன்றோ!

அங்கிருந்தும் அப்பர் திருஅண்ணாமலை முதலிய நடு நாட்டுத் தலங்களை வணங்கிக்கொண்டு, பின்பு தொண்டை நாட்டிற் புக்குக் காஞ்சிபுரம் முதலிய தலங்களைக் கண்டு திருப்பதிகங்கள் பாடிச் சென்று திருக்காளத்தியை யடைந்தார். தென்கயிலை எனப்பெறும் திருக்காளத்தியி லிருக்கும்போது வடகயிலைக்குச் செல்ல வேண்டுமென்னும் பெருவிருப்பம் சொற்கோவின் திருவுள்ளத்தில் தோன்றியது. அதன்படி அவர் புறப்பட்டுச் சென்றனர். அடியார் சூழாத்தினர் வாரணாசிவரையில் அவருடன் சென்றனர். அவர்களை அங்கு நிறுத்திவிட்டுத், தமது தளர்ந்த திருமேனியிற்கையும் காலும்சிதைத்து தேய்வதனாலும் தளராதமனமுடை யராய்மார்பினாற் புரண்டுபுரண்டு

சென்று, அதுவுஞ் செய்ய இயலாத நிலையில் அத்திருமலையில் ஓரிடத்தில் அசைவற்றிருந்தார். அச்சமயத்துக் கயிலையாளியாங் கண்ணுதற் பெருங்கடவுள், முனிவர் வேடம் பூண்டு அப்பர் முன்தோன்றி, 'மானிடர் காணுந்தகையதன்று திருக்கயிலை; ஆதலால் 'நீர் திரும்பிச் செல்லலே நமக்குக் கடன்' என்று மனந்துளக்கும் மாற்ற மருளினார். பூதமைந்தும் நிலையிற் கலங்கினும் கலங்கா நெஞ்சங் கொண்ட நம்மப்பர், "ஆளுநாயகன் கயிலையி லிருக்கைகண் டல்லால் மாளு மிவ்வுடல் கொண்டு மீளேன்" என மறுத்தார்.

வந்த வேதியர் மறைந்து "ஓங்கு நாவினுக்கரசனே எழுந்திரு" என்று அருளிச் செய்தனர். அவ்வளவில், அப்பர் ஊறனைத்தும் நீங்கிய உடம்பொடு எழுந்து ஒளி திகழ்ந்தார். எழுந்ததும் தாம் கயிலை நண்ணித் திருக்கோலம்காண அருளுமாறு ஆண்டவனை வேண்டினார். அம்மையப்பர் அங்கிருந்ததோர் பொய்கையைக் காட்டி அதில் முழுகித் தாம் கயிலையிலிருக்கும் முறைமையைத் திருவையாற்றிற் காணும்படி பணித்தருளினார். அவ்வாணையின்படி அப்பர் ஐந்தெழுத்தோதிப் பொய்கையில் மூழ்கினவுடனே, திருவையாற்றிலோர் திருக்குளத்திலிருந்து கரையேறினார். தாம் கண்ட யாவும் சத்தியும் சிவமுமாய் விளங்கின. திருக்கோயிலின் முன் வந்து பார்க்கையில் அதுவே திருக்கயிலாயமாய் விளங்கியது. பல அரிய பதிகங்களைப் பாடிப் பரவினார் அப்பர். அப்பர் மனவுறுதிக்கு இப்பயணமும் ஓர் அரிய சான்றாகும்.

பின்பு காவேரி மருங்குள்ள பல தலங்களை அப்பர் தரிசித்துக் கொண்டு, திருப்பூந்துருத்தியில் ஒரு திருமடம் அமைத்து, அதில் தங்கியிருந்தார். அந்நாளில், பாண்டியநாட்டில் சமணக் குறும்பை அகற்றிச் சைவவிளக்கம் பரப்பிச் சோழநாடு திரும்பும் சம்பந்தர் அப்பரைக் காண வேணவாக் கொண்டு, பூந்துருத்தி நோக்கி வந்து கொண்டிருந்தார். இதை யுணர்ந்து உவகைமீக்கொண்ட அப்பர், வேறொருவரு மறியா வகையில் எதிர் சென்று, சம்பந்தர் எழுந்தருளிவரும் பல்லக்கைச் சுமப்பாரொடு கலந்து பெரும் களிப்புடன்

அதைச் சுமந்து வருகையில், "அப்பர் எங்குற்றார்" என்று சம்பந்தர் ஆவலொடு வினவினர். "உம்மடியேன் உம்மடிகள் தாங்கிவரும் பெருவாழ்வு வந்து எய்தப்பெற்று இங்குற்றேன்" என்று அப்பர் மறுமொழி தந்தார். உள்ளப் பதைப்புடன் சம்பந்தர் விரைந்திழிந்து அப்பரை வணங்க, அவரும் விரைந்து எதிர் வணங்க, இருவரும் ஏனையடியார்களும் பெருமகிழ் வெய்தினார்கள்.

சம்பந்தர் வாயிலாகப் பாண்டி நாட்டுச் செய்திகளை யெல்லாம் அறிந்த அப்பர் அந்நாட்டிற்கெழுந்தருளி அங்குள்ள தலங்களை வணங்கினார். பின்பு பொன்னி நாடு திரும்பித் திருப்புகலூரில் தங்கிப் பல அரிய பதிகங்களைப் பாடினார். அவருக்கு மண்ணாசை யில்லாத போலவே, பொன்னாசையும் பெண்ணாசையுமில்லை என்பதை உலகுக்கு வெளியிட வேண்டிப் பரமசிவனார் ஒரு நாள் ஆலயத்தின் திருமுன்றிலில் அப்பர் திருத்தொண்டு செய்யும்போது, உழவாரப் படை நுழைந்த விடமெல்லாம் பொன்னும் நவமணிகளும் பொலிந்திலங்கச் செய்தார். அப்பர் அவைகளைக் கண்டும் அவைகளைப் பருக்கைக் கற்களோடொப்ப மதித்து உழவாரத்திலேந்தி எறிந்துவிட்டார். சிவனடியார்கள் 'ஓடும் செம்பொனும் ஒக்கவே நோக்கும்' இயல்பினரன்றோ? பின்பு தேவலோகப் பொதுமாதர், அப்பர் எதிர்த் தோன்றித் தம் தோதக வித்தை யெல்லாங் காட்டி அவர் மனதை மருட்ட முயன்றனர். சிறிதும் நிலை கலங்காப் பேருணர்வுநிலை நின்ற பெரியார், அவர்கள் தமக்கு இன்னதெதுவும் செய்ய முடியாதென்னு முண்மையைக் கூறி, அவர்களைப் போமாறு பணிக்க, அவர்களும் பெரியாரை வணங்கி அகன்றார்கள். சில நாள் கழிந்த பின்னர், "மன்னிய அன்புறு பத்திவடிவான வாகீசர்," இனியும் மண்ணுலகில், 'நில்லாமே தாம் மாதொரு பாகன் மலரடிக்கீழ்த் தங்கிவிட வேண்டுமென்று கருத்துட் கொண்டார். அக்காலம் கி. பி. 655ஐ ஒட்டியிருக்கலாம். உயிர்க்குறுதி பயக்கும் எண்ணில் திருப்பாசுரங்களை வாய்மலர்ந்தருளிய நம் திருநாவுக்கரசு சுவாமிகள், ஒரு சித்திரை மாதத்துச் சதயத் திருநாளில், "எண்ணுகேன் என்சொல்லி எண்ணு

கேனே" (6—99) என்னும் திருத்தாண்டகத்தைப்பாடி, "நண்ணரிய சிவானந்த ஞானவடிவே யாகி அண்ணலார் சேவடிக்கீழ்" எய்தினார்கள்.

திருச்சிற்றம்பலம்

"போற்றுதிரு வாமூரில் வேளாண் தொன்மைப்
பொருவில்குறுக் கையரதிபர் புகழனார்பால்
மாற்றருமன் பினிற்றிலக வதியா மாது
வந்துதித்த பின்புமரு ணீக்கி யாருந்
தோற்றியமண் சமயமுறு துயர நீங்கத்
துணைவரருள் தரவந்த சூலை நோயால்
பாற்றருநீ ளிடரெய்திப் பாடலிபுத் திரத்திற்
பாழியொழித் தரனதிகைப் பதியில் வந்தார்.

வந்துதமக் கையரருளால் நீறு சாத்தி
வண்தமிழால் நோய்தீர்ந்து வாக்கின் மன்னாய்
வெந்தபொடி விடம்வேழம் வேலை நீந்தி
வியன்சூலங் கொடியிடபம் விளங்கச் சாத்தி
அந்தமிலப் பூதிமகன் அரவு மாற்றி
அருட்காசு பெற்றுமறை யடைப்பு நீக்கிப்
புந்திமகிழ்ந் தையாற்றிற் கயிலை கண்டு
பூம்புகலூர் அரன்பாதம் பொருந்தி னாரே"

திருநாவுக்கரசர் திருவடி வாழ்க

இச்சரித்திரம், செங்கற்பட்டு ஜில்லா கல்விப் பகுதித் தலைவர், திருவாளர் சு. சச்சிதானந்தம் பிள்ளை, பி.ஏ., எல்.டி. அவர்களால் எழுதப்பட்டது.

சிவமயம்

# அரும்பொருளகராதி

(திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியார், பி. ஏ., பி. எல். அவர்களால் தொகுக்கப்பட்டு, திருக்கோவலூராதீனம் — ஸ்ரீலஸ்ரீ சிவசண்முக மெய்ஞ்ஞான சிவசாரிய சுவாமிகள் அவர்களால் அங்கீகரிக்கப்பெற்றது.)

[குறிப்பு :—இவ்வகராதியில் பற்பல அரும்பொருள்கள் தொகுக்கப்பட்டுள்ளன. விரிவஞ்சிப் பற்பல குறிப்புக்களும் பொருள்களும் விடப்பட்டன. சில பொருள்களுக்கு மட்டும் எல்லாப் பதிகக் குறிப்புகளும் ஏனைய பலவற்றிற்குச் சிற்சில குறிப்புக்களும் தரப்பட்டுள்ளன. பொதுவாக நான்காம் திருமுறையில் கவிச்சுவை நிரம்பிய பாசுரங்களும், ஐந்தாம் திருமுறையில் உபதேசம் நிரம்பிய பாசுரங்களும், ஆறும் திருமுறையில் இறைவன் தன்மை, அருளும் வகை, வரலாறுகள் முதலியன நிரம்பிய பாசுரங்களும் உள்ளனவென்று கூறலாம். சாதாரணமாகப் பலராலும் பாடப்பெற்றும், சொற்பொழிவுகளில் கையாளப்பெற்றும் வரும் பல பாசுரங்கள் இவ்வகராதியில் அக்காரணம்பற்றியே சேர்க்கப்படவில்லை. இவ்வகராதியில் திருத்தங்கள் செய்யவேண்டியிருப்பின் அன்பர்கள் தெரிவிக்கவும். இவ்வகராதியை அடிப்படையாகக் கொண்டு ஒவ்வொருவரும் பெருக்கிக்கொள்ள வேண்டும். இவ்வகராதியில் ஒவ்வொரு குறிப்பிலும் மூன்று எண்கள் தரப்பட்டுள்ளன. அவை முறையே திருமுறை எண், பதிக எண், பாசுர எண் ஆகும். உதாரணமாக அகச்சமயிகள் என்ற குறிப்புக்கு 4. 20. 3. என்று தரப்பட்டுள்ளது. அதாவது நான்காம் திருமுறையில் இருபதாம் பதிகத்துள் மூன்றும் பாசுரம் ஆகும்.]

அகச்சமயிகள்

உருத்திர பல்கணத்தார் விரிசடை விரதிகள் அந்தணர் சைவர் பாசுபதர் காபாலிகள் தெருவினிற் பொலியுந் திருவாரூர் 4. 20. 3.

அகச்சான்று—இடபம் பொறிக்க விண்ணப்பம்

இடபம் பொறித்தென்னை என்று கொள்ளாய் 4. 109. 10.

„ —இறைவன் திருவாய்மூருக்கு வாவென்றது

உன்னி உன்னி உறங்குகின் றேனுக்குத், தன்னை வாய்மூர்த் தலைவனு மாசொல்லி, என்னை வாவென்று போனார் 5. 50. 2, எங்கே என்னை இருந்திடம் தேடிக்கொண், டங்கேவந் தடையாளம் அருளினார், தெங்கே தோன்றும் திருவாய்மூர்ச் செல்வனார், அங்கே வாவென்று போனார் அதென்கொலோ 5. 50. 1.

„ —ஐயாறடைந்த வகை

யாதும் சுவடு படாமல் ஐயாறடைகின்ற போது 4. 3. 1.

„ —ஐயாற்றில் கண்ட காட்சி

சிவம் சத்தியு மாயகிலை 4. 3. [1—11]

„ —கதவைத் திறப்பித்தது

கண்ணினால் உமைக் காணக் கதவினைத் திண்ணமாகத் திறந்தருள் செய்ம்மினே 5. 10. 1, திறக்கப் பாடிய என்னினும் செந்தமிழ் உறைப்புப்பாடி அடைப்பித்தாரும் நின்றார் 5. 50. 8, இரக்க மொன்றிலீர் எம்பெரு மானிரே...சரக்க இக்கத வந்திறப்பிம்மினே 5. 10. 11.

„ —கயிலை சென்றது

காடொடு நாடு மலையும் கைதொழு தாடா வருவேன் 4. 3. 5.

„ —கல் மிதந்தது

கல்லினோ டெனைப்பூட்டி அமண்கையர் ஒல்லை நீர்புக நூக்க என் வாக்கினால் நெல்லு நீள்வயல் நீலக் குடிஅரன் நல்ல நாமம் நவிற்றிஉய்ந் தேன்அன்றே 5. 72. 7, கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும் 4. 11. 1.

அகச்சான்று—சமணர் அழிவெய்தியது

*வாயிருந் தமிழேபடித் தாளுறு ஆயிரம் சமணும் அழிவாக்கி னார்* 5. 58. 9.

,, —சமணர் மறைத்த இலிங்கம் வெளிப்பட்டது

*தலையெ லாம்பறிக் குஞ்சமண் கையருள் நிலையி னான்மறைத் தால்மறைக் கொண்ணுமே* 5, 58. 1.

,, —சமண் தவிர்ந்தது

*குண்டரொடு பிரித்தெனை யாட்கொண்டார்* 6. 53. 8, *எண் ணில் சமண்டீர்த் தென்னையாட் கொண்டான்* 6. 52. 3, *தக்கார்வ மெய்திச் சமண்தவிர்ந் தான்றன் சரண் புகுந்தேன்* 4. 98. 9, *கையிடு சோறு நின்றுண்ணுங் காதலம ணரைவிட்டு உய்யுநெறி கண்டிங் குய்யப் போந்தேனுக்கும்* 4. 101. 9.

,, —சிவபூசை செய்தது

*சலம்பூவொடு தூபம் மறந்தறியேன்* 4. 1. 6, *என்போலிகள் பறித்திட்ட இலையும் முகையுமெல்லாம் அம்போதெனக் கொள்ளும் ஐயன்* 4. 92. 10.

,, —சூலம் பொறிக்க விண்ணப்பம்

*மின்னுரு மூவிலைச் சூலம் என்மேல் பொறி* 4. 109. 1.

,, —சூலை

*சுடுகின்றது சூலை தவிர்த்தருளீர்* 4. 1. (8, 4) *உடலுள் உறு சூலை தவிர்த்தருளாய்* 4. 1. 6, *வலிக்கின்றது சூலை தவிர்த்தருளீர்* 4. 1. 7, *பிணிகாட்டி ஆட்கொண்டு பிணிதீர்த்த ஆரூரர்* 4. 5. 3, *ஊனத்தை நீக்கி உலகறிய என்னை யாட்கொண்டவன்* 4. 80. 6, *உறுபிணியார்...ஓடிப்போனார்* 6. 98. 5.

,, —தாம் சமணரா யிருந்தது

4. 5. 4, 4. 39. 7, 4. 94. 10, 4. 99. 1, 4. 101. 7, 6. 3. 7, 6. 91. 8.

அகச்சான்று—திருவடி சூட்டக் கேட்டது

*பூவார் அடிச்சுவடு என்மேற் பொறித்துவை* 4. 96. 1.

" —திருவடி சூட்டப்பெற்றது

*காலனை வீழச் செற்ற கழலடி இரண்டும் வந்தென் மேலவாய் இருக்கப் பெற்றேன்* 4. 37. 1, *நனைந்தனைய திருவடி என்தலைமேல் வைத்தார் நல்லூரெம் பெருமானார்* 6. 14. (1—11), *அடியேனை ஆளாக் கொண்டு தன்னுடைய திருவடி என்தலைமேல் வைத்த தீங் கரும்பை* 6. 68. 4.

" —திருவடி முத்தி எய்தியது

*உன்னடிக்கே போதுகின்றேன் பூம்புகலூர் மேவிய புண்ணியனே* 6. 99. (1—10)

" —நஞ்சுண்டது

*வஞ்சனை பாற்சோறாக்கி வழக்கிலா அமணர் தந்த நஞ்சமுது ஆக்குவித்தார்* 4. 70. 5.

" —நீற்றறை குளிர்ந்தது

*மாசில் வீணையும் மாலை மதியமும் வீசு தென்றலும் வீங்கிள வேனிலும் மூசு வண்டறை பொய்கையும் போன்றதே ஈசனெந்தை இணையடி நீழலே* 5. 90. 1.

" —படிக்காசு பெற்றது

*பாடிப் பெற்ற பரிசில் பழங்காசு வாடி வாட்டம் தவிர்ப்பார்* 5. 50. 7.

" —பாமாலை பாடியது

*பத்தமறுத்தாளாக்கிப் பணிகொண்டாங்கே பன்னிய நூற்றமிழ் மாலை பாடுவித்தென், சித்தை மயக்கறுத்த திருவருளினானை* 6. 84. 4, *பத்திமையாற் பணிந்தடியேன் தன்னைப் பன்னாள் பாமாலை பாடப் பயில்வித்தானை* 6. 54. 3.

அகச்சான்று—வயதுமுதிர்ந்தவர்

*வெண்மயிர் விரவி மேலும் மூளைக்கின்ற வினையைப் போக முயல்கிலேன்* 4. 78. 8, *கோதைநல்லார் தங்களோ டின்பம் எய்த இளையனு மல்லேன்* 4. 78. 9.

அகத்துறைப் பகுதிகள்

*வனபவள (பதிகம் முழுமையும்)* 4. 6. (1—10), *சொன்மாலை ஷெ* 4. 12. (1—10), *அட்டுமினில் ஷெ* 4. 97. (1—10), *நிறைக்க வாலிய ஷெ* 5. 29. (1—10), *வண்ணமும் ஷெ* 5. 40. (1—10), *மாதியன்று, ஷெ* 5. 45. (1—10), *கோணன்மாமதி ஷெ* 5. 53. (1—12), *வண்ணங்கள் ஷெ* 6. 9. (1—10), *கொடிமாட ஷெ* 6. 13. (1—10), 5. 7. 6—8, 5. 46. 1—5, 5. 64. 4, 5. 66. 9, 5. 88. 4—9,6.25. 7, (*முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்*), 6. 35. 3—7, 6. 45. 1, 4—8, 6. 58. 3—7.

அகப்பூசை

*காயமே கோயி லாகக் கடிமனம் அடிமையாக வாய்மையே தூய்மை யாக மனமணி இலிங்க மாக நேயமே நெய்யும் பாலா நிறையநீ ரமைய ஆட்டிப் பூசனை ஈச னார்க்குப் போற்றவிக் காட்டி னோமே* 4. 76. 4, *சிந்தை வெள்ளப் புனலாட்டிச் செஞ்சொன் மாலை அடிச்சேர்த்தி எந்தை பெம்மான் என்னம்மான் என்பார் பாவ நாசமே* 4. 15. 11.

அஞ்சாமை

*உடையார் ஒருவர் தமர்நாம் அஞ்சுவ தியாதொன்றுமில்லை அஞ்ச வருவதுமில்லை* 4. 2. (1—10), *மண்பாதலம் புக்கு மால் கடல் மூடிமற் றேழுலகும் விண்பால் திசைகெட்டு இருசுடர் வீழி னும் அஞ்சல் நெஞ்சே* 4. 94. 9, *வானந் துளங்கிலென் மண்கம்ப மாகிலென்......ஊனமொன் றில்லா ஒருவனுக் காட்பட்ட உத்த மர்க்கே* 4. 112. 8, *தப்பி வானம் தரணி கம்பிக்கிலென் அப்ப னூர் உளார் அஞ்சுவ தென்னுக்கே* 5. 77. 6, *நாமார்க்கும் குடியல்லோம்*

நமனை யஞ்சோம்.........அடியிணையே குறுகி னோமே 6. 98. 1, பாராண்டு பகடேறி வருவார் சொல்லும் பணிகேட்கக் கடவோமோ 6. 98. 3, நாவலந்தீ வகத்தினுக்கு நாதரான காவலரே ஏவிவிடுத்தா ரேனும் கடவமலோம் 6. 98. 6.

## அடியார் குணமும் செய்கையும்

பத்துகொலாம் அடியார் செய்கைதானே 4. 18. 10, குணங்கள் சொல்லியுங் குற்றங்கள் பேசியும் வணங்கி வாழ்த்துவர் அன்புடையாரெலாம் 5. 14. 6.

## அடியார் கூட்டுறவும் பணியும்

தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியம் 4. 101. (1—10), பரவுமின் பணிமின் பணிவாரொடே விரவுமின் விரவாரை விடுமினே 5. 43. 5.

## அப்பர் அன்பின் பெருமை

இரவும் பகலும் பிரியாது வணங்குவன் எப்பொழுதும் 4. 1. 1, நினையா தொருபோதும் இருந்தறியேன் 4. 1. 2, சலம் பூவொடு தூபம் மறந்தறியேன் உன்னுமம் எந்நாவில் மறந்தறியேன் 4. 1. 6, அளவுபடாத தொரன்போடையா றடைகின்றபோது இளமணா நாகு தழுவி ஏறு வருவன கண்டேன் 4. 3. 11, அழலார் வண்ணத் தம்மானை அன்பில் அணைத்து வைத்தேனே 4. 15. 7, வானோர் பெருமானை விருப்பால் விழுங்கியிட்டேனே 4. 15. 8, எண்ணித் தம்மை நினைந்திருந் தேனுக்கு அண்ணித்திட்டு அமுதூறும் என்னாவுக்கே 5. 17. 2.

## அப்பர் சமணராயிருந்தமை

குண்டனாய்த் தலைபறித்துக் குவிமுலையார் நகை காணாதுழிதர்வேனை 4. 5. 4, பல்லுரைச் சமணரோடே பலபல காலமெல்லாம் சொல்லிய செலவுசெய்தேன் 4. 39. 7, திருந்தா அமணர்தம் நீநெறி பட்டுத் திகைத்து முத்திதரும், தாளிணைக்கே சரணம் புகுந்தேன் 4. 94. 10, உதவித்தாய் முன்னற வுரைகாட்டி அமணரொடே காது-

வித்தாய் 4. 99. 1, பண்ணியசாத்திரப் பேய்கள் பறிதலைக் குண்டரை விட்டு எண்ணில் புகழ் ஈசன்தன் அருள்பெற் றேற்கும் 4. 101. 7, குண்டாக்கனாய் உழன்று கையில் உண்டு...அமணே நின்றார் சொற் கேட்டு உடனாகியுழிதந்தேன்...ஏழையேன் நான்பண் டிகழ்ந்தவாறே 6. 3. 7, அறந்தெரியா ஊத்தைவாய் அறிவில் சிந்தையாரம் பக் குண்டரோ டயர்த்துநாளும், மறந்து மரன்திரு வடிகள் நினைய மாட்டா மதியிலியேன் வாழ்வெலாம் வாளா மண்மேற், பிறந்த நாள் நாளல்ல வாளா ஈசன்பேர் பிதற்றிச் சீரடிமைத் திறத்து ளன்பு செறிந், தெறும்பி யூர்மலைமேல் மாணிக்கத்தைச் செழுஞ் சுடரைச் சென்றடையப் பெற்றேன் நானே 6. 91. 8.

அப்பர் மனைவாழ்க்கை நடத்தியதுண்டா? (இல்லை யென்பது மரபு. உண்டென்பார் கூறும் சான்றுகள் கீழ் வருவன)

உயர்ந்தேன் மனைவாழ்க்கையும் ஒண்பொருளும் ஒருவர் தலை காவல் இலாமையினால் 4. 1. 7, வலித்தேன் மனைவாழ்க்கை மகிழ்ந் தடியேன் 4. 1. 8, தீவினைச் சுற்றமென்னும் பொருளுளே அழுந்தி நாளும் போவதோர் நெறியும் காணேன் 4. 26. 4, கழித்தி லேன் காமவெந்நோய் காதன்மை என்னும் பாசம் ஒழித்திலேன் 4. 26. 7, பஞ்சின் மெல்லடியினார்கள் பாங்கராய் அவர்கள் நின்று நெஞ்சில் நோய்பலவும் செய்து நினையினும் நினையவொட்டார் 4. 52. 3, தாழ்குழல் இன்சொல் நல்லார் தங்களைத் தஞ்சமென்று ஏழையே னாகிநாளும் என்செய்கேன் 4. 52. 5, இலவினார் மாதர் பாலே இசைந்து நான்இருந்து பின்னும் நிலவுநாள் பல வென் றெண்ணி 4. 54. 6, மானுலா மழைக்கணார்தம் வாழ்க்கையை மெய்யென்று எண்ணி நானெலா மினையகால நண்ணிலேன் 4. 67. 6, பாலனாய்க் கழிந்தநாளும் பனிமலர்க் கோதைமார் தம் மேலனாய்க் கழிந்தநாளும் 4. 67. 9, மனைத்திடை ஆட்டம்பேசி மக்களே சுற்ற மென்னும் கனைத்திடை ஆட்டப்பட்டு காதலால் உன்னைப் பேணும் குணத்திடை வாழமாட்டேன் 4. 69. 9, தளையவிழ் கோதைநல் லார் தங்களோடு இன்பம் எய்த இளையனும் அல்லேன் 4. 78. 9, மக்களே மணந்ததாரம் அவ்வயிற்றவரை ஓம்பும் சிக்குளே அழுந்தி

ஈசன் திறம்படேன் 4. 79. 2, சுற்றமும் துணைநன் மடவாளொடு பெற்ற மக்களும் பேணல் ஒழிந்தனர் 5. 70 2, எழுதுபாவை நல்லார் திறம்விட்டு நான்தொழுது போற்றி நின்றேனையும் 5. 90. 8, வாரார்ண்ட கொங்கையர் மனையில் சேரோம் 6. 98. 3.

அப்பூதியடிகள்

அஞ்சிப்போய்க் கலிமெலிய அழலோம்பும் அப்பூதி குஞ்சிப் பூவாய் நின்ற சேவடியாய் 4. 12. 10.

அமர்நீதி நாயனுர்

நல்லூரகத்தே, கீட்கொண்ட கோவணங்கா வென்று சொல்லிக் கிறிபடத்தான், வாட்கொண்ட நோக்கி மனைவியொடும் அங்கோர் வாணிகனை 4. 97. 7.

அறுகயிறூசல்

பிறைபுல்கு சடையாய்ப் பாதத் தறுகயி றூசலானேன் 4. 26.6.

அன்பிலாதவர்கட்கு நரகமுண்டு

இரப்பவர்க் கீயவைத்தார் ஈபவர்க் கருளும் வைத்தார் கரப்பவர் தங்கட் கெல்லாம் கடுநரகங்கள் வைத்தார் 4. 38. 10.

அன்பில்லாத வழிபாடு

கங்கையாடிலென் காவிரி யாடிலென் 5. 99. 2, வேதம் ஓதிலென் வேள்விகள் செய்யிலென் 5. 99. 4, நன்று நோக்கிலென் பட்டினியாகிலென் 5. 99. 8, கோடிதீர்த்தங் கலந்து குளித்தவை ஆடினாலும் 5. 99. 9, எரிபெருக்குவர் அவ்வெரி ஈசன அருவருக்கம தாவ துணர்கிலார் 5. 100. 7, கோணும் புல்லும் ஒருகையிற் கூர்ச்சமும் தோலும் பூண்டு துயரமுற் றென்பயன் நீல மாமயிலாடு துறையனே நாடும் வேண்டுமோ நன்னுணர்ந் தோர்கட்கே 5. 89. 8.

அன்பே பாசம்

அன்பெனும் பாசம் வைத்தார் 4. 30. 3.

அன்பே பொருள்

*அன்பிலாத் தொண்டர்கூடித் தொழுதழு தாடிப்பாடும் அன்ப லாற் பொருளுமில்லை ஐயன் ஐயாறனார்க்கே* 4. 40. 6.

அன்பை அளத்தல்

*வேட்கையாற் பரவுந்தொண்டர் அடிமையை அளப்பர்போலும்* 4. 56. 5, *விளக்கும் வேறுபடப் பிறர் உள்ளத்தில் அளக்கும் தன் னடியார் மனத்து அன்பினை* 5. 21. 6.

அஷ்ட குணங்கள் (*கடவுள் எண்குணத்தார் பார்க்க.*)

அஷ்ட புஷ்பம் (*எண்வகை மலர் பார்க்க.*)

அஷ்ட மூர்த்தம்

*இருநிலனாய்த் தீயாகி நீருமாகி இயமானனாய் எறியுங் காற்று மாகி, அருநிலைய திங்களாய் ஞாயிறாகி ஆகாசமா யட்டமூர்த்தியாகி* 6. 94. 1, *அட்டமா உருவினானே* 4. 57. 3, *அட்டமூர்த்தி அண்ணா மலை கைதொழ* 5. 5. (1—6), *எட்டு மூர்த்தியாய் நின்று இயலுந் தொழில்* 5. 89. 8, *நீருமாய்த் தீயுமாகி நிலனுமாய் விசும்புமாகி ஏறுடைக் கதிர்களாகி இமையவர் இறைஞ்ச நின்று* 4. 54. 8.

அஷ்ட வீரட்டம்

*அதிகை, கடவூர், கண்டி, குறுக்கை, கோத்திட்டை, கோவல், பறியல், வழுவை* 6. 71. 2.

ஆதிரைப் பூ சூடுதல்

*ஆதிரை நாற்றஞ் சூடுவர் நன்னறுந் திங்களார்* 5. 12. 2.

ஆமையின் துயரம்

*உலையை ஏற்றித் தழலெரி மடுத்த நீரில் திளைத்து நின்றாடுகின்ற ஆமைபோல் தெளிவிலாதேன்* 4. 79. 6.

இடபக்கொடி

*கொடியார் இடபத்தர்* 6. 17. 6.

இயற்கை வர்ணனைகள் சில

4. 55. (2, 7, 8), 4. 104. 2, 6. 76. (3, 4).

இளங்கோயில்

*தோற்றும் கோயிலும் தோன்றிய கோயிலும்........இளங்* கோயிலே 5. 11. 1.

ஈகை - அருள்

*இரப்பவர்க்கு ஈயவைத்தார் ஈபவர்க்கு அருளும் வைத்தார்* 4. 38. 10.

உடம்பின் பயன்

*மெய்யுளே விளக்கை யேற்றி வேண்டளவு உயரத் தூண்டி உய்வதோர் உபாயம்பற்றி உகக்கின்றேன்* 4. 54. 9, *வாய்த்தது நந்தமக் கீதோர் பிறவி மதித்திடுமின்......தில்லையம்பலத்துக் கூத்த னுக் காட்பட் டிருப்பதன்றே நந்தங் கடைமையே* 4. 81. 5, *குறை விலோம் கொடுமானுட வாழ்க்கையால்...இறைவன் நீள் கழல்ஏத்தி இருக்கிலே* 5. 39. 5, *உடம்பெனும் மனையகத்துள் உள்ளமே தகளி யாக, மடம்படும் உணர்நெய் யட்டி உயிரெனுந் திரிமயக்கி, இடம் படு ஞானத்தீயால் எரிகொள இருந்து நோக்கில் கடம்பமர் காளை தாதை கழலடி காணலாமே* 3. 75. 4, *குனித்த புருவமும்...எடுத்த பொற்பாதமும் காணப்பெற்றால் மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே* 4. 81. 4, *உடலெனும் இடிஞ்சில் தன்னில் நெய்யமர் திரியுமாகி நெஞ்சத்துள் விளக்குமாகிச் செய்யவர் கரிய கண்டர்* 4. 20. 2, *பொள்ளலிக் காயம் தன்னுள் புண்டரிகத்திருந்த வள்ளலை* 4. 42. 6, *திருவங்கமாலை* 4. 9. (1—12).

உடல் நூல் நுட்பம்

*கருவாகிக் குழம்பிருந்து...உருவாகி* 6. 25. 6.

உமையொருபாகர்

*கற்றார் பயில்கடல் நாகைக் காரோணத்தெங் கண்ணுதலே, விற்றாங் கியகரம் வேல்நெடுங்கண்ணி வியன்கரமே, நற்றாள் நெடுஞ் சிலை நாண்வலித்தகர நின்கரமே, செற்றார் புரஞ்செற்ற சேவகம் என்னை கொல் செப்புமினே* 4. 108. 2, *ஒருடம் பிருவராகி...பரம மூர்த்தி* 4. 22. 6, *குங்குமத்தின் மேனி அவன்றிறமே* 4. 6. 3, *சரிபுரி குழலியோடும் அணையலால் இருக்கையில்லை* 4. 40. 3,

உமையலா தருவமில்லை 4. 40. 9, பெருந்திரு இமவான் பெற்ற பெண்கொடி பிரிந்த பின்னை, வருந்துவான் தவங்கள்செய்ய மாமணம் புணர்ந்து மன்னும், அருந்திருமேனிதன்பால் அங்கொருபாகமாகத், திருந்திட வைத்தார் சேறைச் செந்நெறிச் செல்வனாரே 4. 73. 1, அரிதரு கண்ணியாளை ஒருபாகமாக அருள்காரணத்தில் வருவார் 4. 8. 2, கொன்றை துன்றுசடைபாக மாதர் குழல் பாகமாக வருவர் 4. 8. 10, இலங்கு பொற்றோடும் விலைபெறு சங்கக் குழையும் 4. 2. 7, புதுவிரிபொன்செய் யோலையொரு காதொர் காதுசுரி சங்க நின்றுபுரள 4. 8. 10, ஆழிவளைக் கையினாளும் 4. 4. 5, பாதித்தன் திருவுருவில் பெண்கொண்டானை 6. 26. 1.

உயிர்கள் பணிசெய் கடமை

வல்லையாய்ப் பணிசெய் 5.33. (1—11), என்கடன்பணிசெய்து கிடப்பதே 5. 19. 9.

உவமைகள்

காத்தாள்பவர் காவலிகழ்ந்தமையாற் கரைநின்றவர் கண்டு கொளென்று சொல்லி, நீத்தாய கயம்புக நூக்கியிட நிலைக்கொள்ளும் வழித்துறை யொன்றறியேன் 4.1.5, விண்ணுறவடுக்கிய விறகின் வெவ்வழல் உண்ணிய புகிலவை யொன்றுமில்லையாம் 4. 11. 8, உறுகயிறூசல் போல ஒன்றுவிட்டொன்றுபற்றி மறுகயிறூசல் போல வந்து வந்துலவு நெஞ்சம் 4. 26. 6, உடலெனும் இடிஞ்சில் தன்னில், நெய்யமர் திரியுமாகி நெஞ்சத்துள் விளக்குமாகி 4. 29. 2, பாம்பின் வாய்த்தேரை போலப் பலபல நினைக்கின்றேனை 4. 46. 1, மனமெனுந் தோணிபற்றி 4. 46. 2, உயிர்நிலை யுடம்பேகாலா 4. 52. 7, உடம்பெனும் மனையகத்துள் உள்ளமே தகளியாக 4. 75. 4, உலையை ஏற்றித்தழலெரிமடுத்த நீரில் திளைத்து நின்றாடுகின்ற ஆமைபோல் தெளிவிலாதேன் 4.79.6, பொன்மலையில் வெள்ளிக்குன்றது போல 4. 81. 3, சுழலார்துயர் வெயிற்சுட்டிடும் போதடித்தொண்டர் துன்னும் நிழலாவன 4. 92. 19, நெஞ்சம் என்பதோர் நீள்கயந்தன்னுளே வஞ்சம் என்பதோர் வான் சுழிப்பட்டு நான் 5. 27. 8, எலிபோல் இழித்தேறியும் ஏங்கியும் தோணியாகிய 5. 33. 7, ஓடும் நீரினை ஓட்டைக்குடத்தட்டி மூடிவைத்திட்ட மூர்க்கனொடொக்குமே 5. 99. 9 மூத்திகாட்டும் எணியை... ..........யேறவாங்கும் தோணியை 6. 46. 4.

உள்ளொளி

*தெள்ளத் தேறித் தெளிந்து தித்திப்பதோர் உள்ளத் தேறல் அமுதவொளி வெளி கள்ளத் தேன்கடி யேன்கவ லைக்கடல் வெள்ளத் தேனுக் கெவ்வாறு விளைந்ததே* 5. 91. 9.

உறக்கத்திலும் கடவுள் நினைவு

*அஞ்சும் போதும் துயிலின்றி ஏத்துவார்* 5. 9. 6, *உன்னி உன்னி உறங்கு கின்றேனுக்குத் தன்னை வாய்மூர்த் தலைவனுமா சொல்லி* 5. 50. 2, *சிட்டனைத் திருவால வாயிற்கண்டேன் தேவனைக் கனவில் நான்கண்ட வாறே* 6. 97. 6.

எண்குணங்களுள் நிற்றல்

*தென்றிசைக்கோன் தானே வந்து கோவாடிக்குற்றேவல் செய் கென்றாலும் குணமாகக் கொள்ளோம் எண்குணத்துளோமே* 6. 98. 10.

எண்வகை மலர்

*உரை செய்நூல் வழி ஒண்மலர் எட்டிடத் திரைகள் போல் வரு வல்வினை தீர்ப்பரால்* 5. 54. 7 (*பதிகம் முழுமையும்*).

ஏகாந்த வழிபாடு

*கடவுளைக் காதலாலே எல்லியும் பகலும் உள்ளே ஏகாந்தமாக ஏத்தும்.* 4. 41. 3.

ஐந்தெழுத்தின் பெருமை

*ஆலைப்படுகரும்பின் சாறுபோல அண்ணிக்கும் அஞ்செழுத்தின் நாமத்தான்காண்* 6. 52. 2, *நமச்சிவாயவே ஞானமும் கல்வியும் நமச்சிவாயவே நானறி விச்சையும் நமச்சிவாயவே நாநவின்று ஏத்துமே, நமச்சிவாயவே நன்னெறி காட்டுமே.* 5. 90. 2 *அருந்த வந்தரும் அஞ்செழுத்தோதினால் பொருந்து நோய்பிணி போகத் துறப்பதோர் மருந்துமாகுவர்* 5. 60. 4, *துஞ்சும் போழ்து நின்னுமத் திருவெழுத்தஞ்சும் தோன்ற அருளும்* 5. 27. 3, *நமச்சிவாய வென்னும் அஞ்செழுத்தும் சாம்அன்று உரைக்கத் தருதிகண்டாய்* 4. 108. 8, *நின்றன் நாமம் உரையாதுயிர் போகப் பெறுவேனாகில் உறுநோய் வந்தெத்தனையு முற்றாலென்னே* 6. 47. 3, *சிவாயநம வென்று நல்லம் மேவிய நாதன் அடிதொழ வெல்லவந்த வினைப்பகை*

*வீடுமே* 5.43.6, *உனதருளால் திருவாய் பொலியச் சிவாயநமவென்று நீறணிந்தேன் தருவாய் சிவகதிநீ* 4.94.6, *விக்கி அஞ்செழுத்தும் ஓத் தொழிந்தும்மை மறக்கினும் என்னைக் குறிக்கொண்மினே* 4. 95. 4, *படைக்கலமாக உன்னுமத் தெழுத்தஞ்சென் னாவிற் கொண்டேன்* 4. 81. 8, *வைத்த பொருள் நமக்காம் என்று சொல்லி மனத்தடைத்துச் சித்தமொருக்கிச் சிவாயநம வென்றிருக்கினல்லால்......அத்தன் அருள் பெறலாமோ* 4. 94. 5, *நற்றுணையாவது நமச்சிவாயவே* 4. 11. 1, *நாவினுக் கருங்கலம் நமச்சிவாயவே* 4. 11. 2, *பாவத்தை நண்ணிநின் றறுப்பது நமச்சிவாயவே* 4. 11. 3, *நாடினேன் நாடிற்று நமச்சிவாயவே* 4. 11. 7, *நல்லகவிளக்கது நமச்சிவாயவே* 4. 11. 8, *மந்திரம் நமச்சிவாய ஆக நீறணியப் பெற்றால் வெந்தறும் வினையும் நோயும்* 4. 77. 4, *வஞ்சனையால் அஞ்செழுத்தும் வழுத்துவார்க்குச் சேயான்* 6. 50. 4, *ஏதுமொன்றும் அறிவிலராயினும், ஓதி அஞ்செழுத்து முணர்வார்கட்குப், பேதமின்றி அவரவர் உள்ளத்தே, மாதுந்தாமும் மகிழ்வர்மாற் பேறரே* 5. 60. 1

ஐவகையால் நினைத்தல்

*ஐவகையால் நினைவார்பால் அமர்ந்து தோன்றும்* 6. 18. 8.

ஓமஞ் செய்தல்

*உமையொரு பாகனை ஓமஞ் செய்தும் உணர்மின்கள் உள்ளத்தால்* 5. 18. 8.

ஓலக்கச் சூளைகள்

*உந்திநின்றுருள்றன் ஓலக்கச் சூளைகள் வாய்தல் பற்றி* 4. 99. 10.

கடவுளுக்குச் சிந்தையே கோயில்

புந்திவட்டத்திடைப் புக்குநின்றானையும் பொய்யென்பனே 4. 113. 5, *சிந்தையுள் சிவமதானார்* 4. 29. 4, *தொண்டர் அகமலாற் கோயிலில்லை* 4. 40. 8, *சிந்தையுள் தெளிவுமாகித் தெளிவினுட் சிவமுமாகி* 4. 48. 5, *நினைப்பவர் மனம் கோயிலாக் கொண்டவன்* 5. 2. 1, *மனத்தகத்தான்......தொண்டர் இனத்தகத்தான்* 6. 8. 5, *நெஞ்சம் ஆலயமாக் கொண்டு நின்றதே* 5. 78. 4, *ஒருவரும் நன் கறியாவண்ணம் என்உள்ளத்துள்ளே ஒளித்துவைத்த சிறையானை* 6. 66. 7, *கைதொழுவார் மனம் ஆலயம்* 4. 17. 8.

### கடவுளும் சத்தியும் நிற்குநிலை

*மலைமகள் தன்னுடைய பாலனை பால்மதி சூடியை* 4. 88. 1, *மனோன்மனியைப் பெற்ற தாயிலானை* 5. 91. 1,

### கடவுளை அறியும் வகை

*அருந்தவத்தின் பெருவலியால் அறிவதன்றி* 6. 91. 10.

### கடவுளைக்காட்டும் கண்ணாடி

*ஆரூர் இனிதமர்ந்தார் தாம்படிமக்கலம் வேண்டுவரேல் தமிழ் மாலைகளால், நாம் படிமக்கலம் செய்து* 4. 102. 3.

### கடவுளைத் தேவரும் அறியார்

*மலரவன்மால் எண்வசுக்கள் ஏகாதசர்கள் இரைக்கும்அமிர்தர்க் கரியவொண்ணான்* 4. 99. 5, *அரிஅயன் இந்திரன் சந்திராதித்தர் அமரரெல்லாம் உரிய நின்கொற்றக் கடைத்தலையார் உணங்காக் கிடந்தார்* 4. 99. 7.

### கடவுளை நினைத்தலின் பயன்

*நெஞ்சினால் நினைந்தேன் நினைவெய்தலும் வஞ்ச ஆறுகள் வற்றின* 5. 44. 4, *பித்தனை...அத்தனை...முத்தினை அடியேனுள் முயறலும் பத்திவெள்ளம் பரந்தது காண்மினே* 5- 44. 6.

### கடவுளை மறவாமை

*புழுவாய்க் பிறக்கினும் புண்ணியா உன்னடி என்மனத்தே வழுவா திருக்க வரந்தர வேண்டும்* 4. 94. 8, *வந்து பிறப்பன் பிறந் தால் பிறையணி வார்சடைப் பிஞ்ஞகன்பேர் மறப்பன் கொலோ* 4. 113. 8

### கடவுளை வழிபடப் பூர்வ புண்ணியம் வேண்டும்

*வலம்புரத் தடிகள்தம்மை நான் அடைந்தேதத் பெற்று* நல்வினைப்பய *னுற்றேனே* 4. 55. 3, *எந்த மாதவம் செய்தனை நெஞ்சமே...பந்தம் வீடவை ஆய பராபரன் அந்தமில் புகழ்ஆரூர் அரநெறி சிந்தையுள்ளும் சிரத்துளும் தங்கவே* 5. 7. 2, *என்ன மாதவம் செய்தனை நெஞ்சமே...மன்னுசோதி நம்பால் வந்து வைகவே* 5. 77. 2.

### கடவுள் அசங்கையர்

*அறிவரிய சிந்தையானை அசங்கையனை* 6. 67. 9.

## கடவுள் அந்தம் ஆதி

*அந்தமும் ஆதியுமாகி நின்றீர்* 4. 95. 2, *ஆதியும் அறிவுமாகி* 4. 48. 2, *அண்டமார் அமரர் கோமான் ஆதிஎம் அண்ணல்* 4. 48. 4, *ஆதியாய் அந்தமானார் யாவரும் இறைஞ்சி ஏத்த* 4. 37. 9, *முதலும் இறுதியும் தாமே போலும்* 6. 2. 6, *முதலாகி நடுவாகி முடிவானானே* 6. 4. 3, *ஈறும் நடுவும் முதலுமாவார்* 6. 17. 1.

## கடவுள் அருளும் வகை

*தெரிபுரி சிந்தையார்க்குத் தெளிவலால் அருளொண்ணாதே* 4. 40. 3, *கண்டலா தருளுமில்லை கலந்தபின் பிரிவதில்லை* 4. 40. 4, *உற்றநோய் தீர்ப்பர் போலும் உறுதுணை ஆவர் போலும்...கற்றவர் பரவிஏத்தக் கலந்தலந் தலந்து பாடும் அற்றவர்க்கன்பர் போலும்* 4. 56. 3, *அற்றார்க்கும் அலந்தார்க்கும் அருள் செய்வான்* 6. 1. 2, *கடைக்கண்ணால் மங்கையுமை நோக்கா வென்மேல் நல்ல மதி வெல்லா மொழித்தான் தன்னை* 6. 19. 4, *முத்தி காட்டும் ஏணியை இடர்க்கடலுட் சுழிக்கப் பட்டிங் கிளைக்கின்றேற் கக்கரைக்கே யேற வாங்கும் தோணியை* 6. 46. 4.

## கடவுள் அவியாக வுள்ளார்

*ஆவியாய் அவியுமாகி அருக்கமாய்ப் பெருக்கமாகி* 4. 32. 7.

## கடவுள் அழைத்தால் வருவார்

*பன்னாள் அழைத்தால் இவன் எனைப் பன்னாள் அழைப்பொழியான் என்றெதிர்ப்படுமே* 4. 112. 9, *சாதல் நாள் நாயேனுன்னை எங்குற்றாயென்ற போதால் இங்குற்றேனென் கண்டாயே* 4. 75. 8.

## கடவுள் அறுசமயத்திலும் ஒருவரே

*மிக்க சமயங்கள் ஆறினுருவாகி நின்ற தழலோன்* 4. 14. 3, *அறுவகைச் சமயம் வைத்தார்* 4. 30. 5, ஷை 4. 33. 6, *சமய மேலாறுமாகித் தானொரு சயம்புவாகி* 4. 45. 5, *விரிவிலா அறிவினார்கள் வேறொரு சமயம் செய்து எரிவினாற் சொன்னாரேனும் எம்பிராற் கேற்றதாகும்* 4. 60. 9, *ஆறொன்றிய சமயங்களின் அவ்வவர்க் கப்பொருள்கள் வேறொன்றிலாதன* 4. 100. 4, *ஆறு சமயத் தவரவரைத் தேற்றும் தகையன தேறிய தொண்டரைச் செந்நெறிக்கே ஏற்றும் தகையன* 4. 100. 7, *ஆறு கூர்மையர்க் கச்சமயப் பொருள், ஆறுபோலெம் அகத்துறையாதியே* 5. 89. 6, *வெவ்வேறாய் இருமூன்று சமயமாகிப் புக்கானை எப்பொருட்கும் பொரு*

*வானுனை* 6. 50. 7, *சமயமவை ஆறினுக்குந் தலைவன்தான்காண்* 6. 65. 7, *தொண்டர்க்கங்கங்கே அறுசமயமாகி நின்ற நிக்கினை* 6. 68. 5.

கடவுள் அறுபத்து நான்கு கலைகளாவார்

*எட்டெட்டிருங் கலையுமானுன் கண்டாய்* 6. 73. 6.

கடவுள் அன்பர்க்கெளியர் வஞ்சர்க்கரியர்

*கரவாடும் வன்னெஞ்சர்க் கரியானைக் கரவார்பால் விரவாடும் பெருமானை* 4. 7. 1, *சலமிலன் சங்கரன் சார்ந்தவர்க்கல்லால் நலமிலன் நாடொறும் நல்குவான் நலன்* 4. 11. 6, *மெய்யர் மெய்நின்றவர்க்கு அல்லாதவர்க்கென்றும் பொய்யர்* 4. 16. 1, *திருந்தா மனமுடையார் திறத்து என்றும் பொருந்தார்* 4. 16. 3, *எளியவர் அடியார்க் கென்றும் இன்னம்பர் ஈசனுரே* 4. 72. 5, *கள்ளமுள்ள மனத்தவர் காண்கிலார்* 5. 80. 6, *உள்ளம் உள்கலந்தேத்த வல்லார்க்கலால் கள்ளமுள்ள வழிக் கசிவானலன்* 5. 82. 4, *கல்லாதார் காட்சிக்கரியார் போலும் கற்றவர்கள் ஏதங் களைவார் போலும்* 6. 89. 7, *கல்லாதார் காட்சிக்கரியாய் போற்றிகற்றூரிடும்பை களைவாய்போற்றி* 6. 5. 1, *காண்டற்கரிய கடவுள் கண்டாய் கருதுவார்க் காற்ற எளியான் கண்டாய்* 6. 23. 1, *வஞ்சனையால் அஞ்செழுத்தும் வழுத்துவார்க்குச் சேயானை* 6. 50. 4, *நேசன்காண் நேசர்க்கு நேசந்தன் பாலில்லாத நெஞ்சத்து நீசர் தம்மைக் கூசன்காண் கூசாதார் நெஞ்சுதஞ்சே குடிகொண்ட குழகன்காண்* 6. 65. 2.

கடவுள் அன்பர் பாரம்பூண்பர்

*தமக்கன்புபட்டவர் பாரமும் பூண்பர்* 4. 17. 2.

கடவுள் ஆகாசமூர்த்தி 6. 15. 4.

கடவுள் ஆகாய மந்திரம்

*அஞ்சும் அடக்கியங்கே ஆகாய மந்திரமுமானுன்* 6. 15. 11.

கடவுள் ஆண் பெண் அலி

*ஆணுகிப் பெண்ணுய வடிவு தோன்றும்* 6. 18. 2, *பெண்ணுனை ஆணுனைப் பேடியானை* 6. 22. 2, *பெண்ணவனை ஆணவனைப் பேடானுனை* 6. 60. 6.

கடவுள் ஆதிரைநாள் உகந்தார்

*ஆலத்தானும் ஆதிரை நாளானும்* 6. 15. 7, *ஆதிரைநாளுகந் தானும் ஆரூரமர்ந்த அம்மானே* 4. 4. 6, *ஆதிரைநாள் ஆதரித்த அம்மான்றன்னை* 6. 79. 1, *ஆதிரைநாளாய் அமர்ந்தார் போலும்* 6. 21. 6.

கடவுள் ஆராவமுது

*வேதிகுடி ஐயனை ஆராஅமுதினை* 4. 90. (1—6).

கடவுள் ஆரியமும் தமிழும் ஆவார்

*ஆரியந் தமிழோடிசையானவன்* 5. 18. 3, *ஆரியன் கண்டாய் தமிழன் கண்டாய் அண்ணாமலை யுறைஎம் அண்ணல் கண்டாய்* 6. 23. 5, *முத்தமிழும் நான்மறையும் ஆனான் கண்டாய்* 6. 23. 9, *நீலமிடற்றான் றன்னைச் செந்தமிழோ டாரியனைச் சீரியானை* 6. 46. 10, *வடமொழியும் தென்தமிழும் மறைகள் நான்கும் ஆனவன்காண்* 6. 87. 1.

கடவுள் ஆனையார்

*வெள்ளி மால்வரைபோல்வதோர் ஆனையார்* 5. 37. 2—11.

கடவுள் இம்மை மறுமை வீடாவார்

*சேயவுலகமும் செல்சார்வும் ஆனானை* 4. 19. 3, *மறுமையும் இம்மையாவார்* 4. 33. 3, *போவதோர் நெறியுமானார்* 4. 86. 2, *மண் பொருந்தி வாழ்பவர்க்கும் மாதீர்த்த வேதியர்க்கும் விண் பொருந்து தேவர்க்கும் வீடு பேறாய் நின்றானை* 4. 12. 5.

கடவுள் இயக்குபவர்

*ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடாதாரே...காண்பாரார் கண்ணுதலாய்க் காட்டாக் காலே* 6. 95. 3.

கடவுள் இனியர்

*என்னிலாரும் எனக்கினியாரில்லை என்னிலும் இனியானொருவன் உளன்* 5. 21. 1, *கனியினும் கட்டி பட்ட கரும்பினும் பனிமலர்க்குழற் பாவை நல்லாரினும் தனிமுடி கவித்தாளும் அரசினும் இனியன் தன்னடைந்தார்க் கிடைமருதனே* 5. 14. 10, *மனிதர்காளிங்கேவம் மொன்று சொல்லுகேன் கனிதந்தாற்கனி புண்ணவும் வல்லிரே புனிதன் பொற்கழல் ஈசனெனுங்கனி இனிது சாலவும் ஏசற்றவர்கட்கே* 5. 91. 7.

கடவுள் இன்பர் துன்பிலார்

*இன்பன்காண் துன்பங்களில்லாதான்காண்* 6. 48. 3.

கடவுள் உடையார் ஆண்டார்

*என்னையும் உடையார் போலும்* 4. 72. 2, *என்னை ஆண்டானை அறிவரிய சிந்தையானை* 6. 67. 9.

கடவுள் உயிர்கட்கு எல்லை

*மல்லைஞாலத்து வாழும் உயிர்க்கெல்லாம் எல்லையான பிரானார்* 5. 20. 6.

கடவுள் உயிர்களைப் பந்துவாக்குவர்

*சிந்தையால் நினைவார்களைச் சிக்கெனப் பந்துவாக்கி உயக் கொளும் காண்மினே* 5. 71. 9.

கடவுள் உருவை யறிதல் முடியாது

*இன்ன உருவென்றறி வொண்ணாதான்காண்* 6. 49. 8.

கடவுள் உலகில் நிற்கும் வகை

*பாலின் நெய்யர்...விறகிடைத்தீயர்* 4. 64. 5, *விறகிற்றீயி னன் பாலிற்படு நெய்போல் மறைய நின்றுளன்* 5. 90. 10.

கடவுள் உள்ளத்தில் உறுதி காட்டுவார்

*உள்ளத்தின் உள்ளிருந்து அங்கு உறுதி காட்டி* 4. 5. 6.

கடவுள் உள்ளே யிருக்கும் வகை

*உள்ளத்தே நிற்றியேனும் உயிர்ப்புளே வருதியேனும் கள் ளத்தே நிற்றியம்மா எங்ஙனம் காணுமாறே* 4. 76. 7.

கடவுள் எண்குணத்தார்

*எட்டுக் கொலாமவர் ஈறில் பெருங்குணம்* 4. 18. 8, *கலைஞானி கள் காதல் எண்குணவன்காண்* 5. 63. 4, *எட்டுவான் குணத்து ஈசன் எம்மான்* 5. 89. 8, *பரமர் போலும் எண்குணத்தார்* 6. 16. 4.

கடவுள் எண்ணும் எழுத்துமாவார்

*எண்ணானை எழுத்தானை எழுத்தினுக்கோர் இயல்பானை* 4. 18. 7, *எண்ணும் எழுத்தும் குறியும் அறிபவர்* 4. 90. 6, *எண் ணானை எழுத்தானை* 6. 12. 5.

கடவுள் எல்லாக் குணமுமுடையவர்

*எண்ணரும்பல் குணத்தினன்காண்* 6. 24. 5.

கடவுள் எல்லாங் கடந்தவர்

*விரிகதிர் ஞாயிறல்லர் மதியல்லர் வேத விதியல்லர் விண்ணும் நிலனும், திரிதரு வாயுவல்லர் செறுதீயு மல்லர் தெளிநீரு மல்லர் தெரியில், அரிதரு கண்ணியாளை யொருபாகமாக அருள் காரணத் தில் வருவார்* 4. 8. 2, *ஆணலார் பெண்ணு மல்லார் அதிகை வீரட் டனாரே* 4. 27. 8, *அண்டத் தப்பால் நின்ற பேரொளி* 6. 1. 10, *அண்டத்துக் கப்பாலாய் இப்பாலானே* 6. 4. 3, *அப்பாலைக் கப்பா லைக் கப்பாலானை* 6. 26. 4, *மண்ணல்லை விண்ணல்லை வலயமல்லை மலையல்லை கடலல்லை வாயுவல்லை, எண்ணல்லை எழுத்தல்லை எரியு மல்லை இரவல்லை பகலல்லை யாவுமல்லை, பெண்ணல்லை ஆணல்லை பேடுமல்லை பிறிதல்லை யானாயும் பெரியாய் நீயே, உண்ணல்லை நல்லார்க்குத் தீயையல்லை உணர்வரிய ஒற்றியூ ருடைய கோவே* 6. 45. 9.

கடவுள் எல்லாமறிந்தவர்

*ஓதிற்றொரு நூலுமில்லை போலும் உணரப்படாத தொன்றில்லை போலும்* 6. 21. 2.

கடவுள் எல்லாமாவார்

*பூவின்கண் வாசனை மலைநிலநீர் தீவளி ஆகாசமா மீசனை* 4. 7. 6, *சிவநெறி அனைத்து மானார்* 4. 35. 2, *தானலா துலகமில்லை சகமலா தடிமையில்லை* 4. 40. 1, *பண்ணினார் பாடலாகிப் பழத்தி னில் இரதமாகி* 4. 70. 4, *பண்ணிலோசை பழத்தினி லின்சுவை* 5. 47. 8, *தூநெறிக்குத் தூநெறியாய் நின்றான்* 6. 11. 1, *நல்வினை யும் தீவினையும் ஆயினானை* 6. 11. 2, *வந்த வரவும் செலவு மானான்* 6. 16. 9, *எல்லாம் சிவனென்ன நின்றாய் போற்றி* 6. 5. 1, *ஓசை ஒலியெலா மானாய் நீயே உலகுக் கொருவனாய் நின்றாய் நீயே* 6. 38. 1, *எல்லா உலகமு மானாய் நீயே* 6. 38. 7, *இல்லானை எவ் விடத்தும் உள்ளான் தன்னை* 6. 11. 3, *உலகுக் கெல்லாம் வித்த வன்காண்* 6. 48. 4, *வித்தாம் முளையாகும் வேரே தானாம் வேண் டும் உருவமாம்* 6. 15. 2, *நாளாம் கொள்ளும் கிழமையாம் கோளே தானாம்* 6. 15. 1, *கூற்றாகிக் கோளுமாகிக் குணமாகி* 6. 80. 5, *காலங்கள் மூன்றா னானே* 6. 4. 4, *தோத்திரமும் சாத்திரமும் ஆனார்* 6. 78. 5, *மன்னனாய்...போகமானாய்* 6. 95. 7.

நீருமாய்த் தீயு மாகி நிலனுமாய் விசும்பு மாகி
ஏருடைக் கதிர்க ளாகி இமையவர் இறைஞ்ச நின்று
ஆய்வதற் கரிய ராகி அங்கங்கே ஆடு கின்ற
தேவர்க்குந் தேவ ராவார் திருப்புக லூர னாரே. ௮

மெய்யுளே விளக்கை ஏற்றி வேண்டள வுயரத் தூண்டி
உய்வதோர் உபாயம் பற்றி உகக்கின்றேன் உகவா வண்ணம்
ஐவரை அகத்தே வைத்தீர் அவர்களே வலியர் சாலச்
செய்வதொன் றறிய மாட்டேன் திருப்புக லூர னீரே. ௯

அருவரை தாங்கி னானும் அருமறை யாதி யானும்
இருவரும் அறிய மாட்டா ஈசனார் இலங்கை வேந்தன்
கருவரை எடுத்த ஞான்று கண்வழி குருதி சோரத்
திருவிரல் சிறிது வைத்தார் திருப்புக லூர னாரே. ௧௦

திருச்சிற்றம்பலம்

---

## 55. திருவலம்புரம் : திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

தெண்டிரை தேங்கி ஓதஞ் சென்றடி வீழுங் காலைத்
தொண்டிரைத் தண்டர் கோனைத் தொழுதடி வணங்கி எங்கும்
வண்டுகள் மதுக்கள் மாந்தும் வலம்புரத் தடிகள் தம்மைக்
கொண்டுநற் கீதம் பாடக் குழகர்தா மிருந்த வாறே. ௧

மடுக்களில் வாளை பாய வண்டினம் இரிந்த பொய்கைப்
பிடிக்களி றென்னத் தம்மிற் பிணைபயின் றணைவ ரால்கள்
தொடுத்தநன் மாலை ஏந்தித் தொண்டர்கள் பரவி ஏத்த
வடித்தடங் கண்ணி பாகர் வலம்புரத் திருந்த வாறே. ௨

தேனுடை மலர்கள் கொண்டு திருந்தடி பொருந்தச் சாத்தி
ஆனிடை அஞ்சுங் கொண்டு அன்பினால் அமர ஆட்டி
வானிடை மதியஞ் சூடும் வலம்புரத் தடிகள் தம்மை
ஞானடைந் தேத்தப் பெற்று நல்வினைப் பயனுற் றேனே. ௩

முளையெயிற் றிளநல் ஏனம் பூண்டுமொய் சடைகள் தாழ
வளையெயிற் றிளைய நாகம் வலித்தரை யிசைய வீக்கிப்

புழைகைய போர்வை போர்த்துப் புனலொடு மதியஞ் சூடி
வளைபயில் இளைய ரேத்தும் வலம்புரத் தடிகள் தாமே. ௪

சுருளுறு வரையின் மேலாற் றுளங்கிளம் பளிங்கு சிந்த
இருளுறு கதிர்நு ழைந்த இளங்கதிர்ப் பசலைத் திங்கள்
அருளுறும் அடிய ரெல்லாம் அங்கையின் மலர்கள் ஏந்த
மருளுறு கீதங் கேட்டார் வலம்புரத் தடிக ளாரே. ௫

நினைக்கின்றேன் நெஞ்சு தன்னால் நீண்டபுன் சடையி னானே
அனைத்துடன் கொண்டு வந்தங் கன்பினால் அமைய ஆட்டிப்
புனைக்கின்றேன் பொய்ம்மைதன்னை மெய்ம்மையைப் புணரமாட்
எனக்குநான் செய்வதென்னே இனிவலம் புரவ னீரே. [டேன்

செங்கயல் சேல்கள் பாய்ந்து தேம்பழ மினிய நாடித்
தங்கயந் துறந்து போந்து தடம்பொய்கை அடைந்து நின்று
கொங்கையர் குடையுங் காலைக் கொழுங்கனி யழுங்கி னாராம்
மங்கல மனையின் மிக்கார் வலம்புரத் தடிக ளாரே. ௮

அருகெலாங் குவளை செந்நெல் அகவிலை ஆம்பல் நெய்தல்
தெருவெலாம் தெங்கு மாவும் பழம்விழும் படப்பை எல்லாம்
குருகினங் கூடி ஆங்கே கும்மலித் திறகு லர்த்தி
மருவலாம் இடங்கள் காட்டும் வலம்புரத் தடிக ளாரே. ௯

கருவரை யனைய மேனிக் கடல்வண்ண னவனுங் காணான்
திருவரை யனைய பூமேல் திசைமுக னவனுங் காணான்
ஒருவரை யுச்சி ஏறி ஓங்கினார் ஓங்கி வந்து
அருமையில் எளிமை யானார் அவர்வலம் புரவ னாரே. ௧௦

வாளெயி றிலங்க நக்கு வளர்கயி லாயந் தன்னை
ஆள்வலி கருதிச் சென்ற அரக்கனை வரைக்கீ ழன்று
தோளொடு பத்து வாயுந் தொலைந்துடன் அழுந்த வூன்றி
ஆண்மையும் வலியுந் தீர்ப்பார் அவர்வலம் புரவ னாரே. ௧௧

திருச்சிற்றம்பலம்

## 56. திருஆவடுதுறை : திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

மாயிரு ஞால மெல்லாம் மலரடி வணங்கும் போலும்
பாயிருங் கங்கை யாளைப் படர்சடை வைப்பர் போலும்
காயிரும் பொழில்கள் சூழ்ந்த கழுமல வூரர்க் கம்பொன்
ஆயிரங் கொடுப்பர் போலும் ஆவடு துறைய னாரே. க

மடந்தைபா கத்தர் போலும் மான்மறிக் கையர் போலும்
குடந்தையிற் குழகர் போலுங் கொல்புலித் தோலர் போலும்
கடைந்தநஞ் சுண்பர் போலுங் காலனைக் காய்வர் போலும்
அடைந்தவர்க் கன்பர் போலும் ஆவடு துறைய னாரே. உ

உற்றநோய் தீர்ப்பர் போலும் உறுதுணை யாவர் போலும்
செற்றவர் புரங்கள் மூன்றுந் தீஎழச் செறுவர் போலும்
கற்றவர் பரவி ஏத்தக் கலந்துலந் தலந்து பாடும்
அற்றவர்க் கன்பர் போலும் ஆவடு துறைய னாரே. ௩

மழுஅமர் கையர் போலும் மாதவள் பாகர் போலும்
எழுநுனை வேலர் போலும் என்புகொண் டணிவர் போலும்
தொழுதெழுந் தாடிப் பாடித் தோத்திரம் பலவுஞ் சொல்லி
அழுமவர்க் கன்பர் போலும் ஆவடு துறைய னாரே. ச

பொடியணி மெய்யர்போலும் பொங்குவெண் ணூலர் போலும்
கடியதோர் விடையர் போலுங் காமனைக் காய்வர் போலும்
வெடிபடு தலையர் போலும் வேட்கையாற் பரவுந் தொண்டர்
அடிமையை அளப்பர் போலும் ஆவடு துறைய னாரே. ரு

வக்கரன் உயிரை வவ்வக் கண்மலர் கொண்டு போற்றச்
சக்கரங் கொடுப்பர் போலுந் தானவர் தலைவர் போலும்
துக்கமா மூடர் தம்மைத் துயரிலே வீழ்ப்பர் போலும்
அக்கரை ஆர்ப்பர் போலும் ஆவடு துறைய னாரே. சா

விடைதரு கொடியர் போலும் வெண்புரி நூலர் போலும்
படைதரு மழுவர் போலும் பாய்புலித் தோலர் போலும்
உடைதரு கீளர் போலும் உலகமு மாவர் போலும்
அடையவர் இடர்கள் தீர்க்கும் ஆவடு துறைய னாரே. எ

முந்திவா னோர்கள் வந்து முறைமையால் வணங்கி ஏத்த
நந்திமா காளர் என்பார் நடுவுடை யார்கள் நிற்பச்
சிந்தியா தேயொ ழிந்தார் திரிபுரம் எரிப்பர் போலும்
அந்திவான் மதியஞ் சூடும் ஆவடு துறைய னாரே. அ

பானமர் ஏன மாகிப் பாரிடந் திட்ட மாலும்
தேனமர்ந் தேறும் அல்லித் திசைமுக முடைய கோவும்
தீனரைத் தியக்க றுத்த திருவுரு வுடையர் போலும்
ஆனரை ஏற்றர் போலும் ஆவடு துறைய னாரே. கூ

பார்த்தனுக் கருள்வர் போலும் படர்சடை முடியர் போலும்
ஏத்துவார் இடர்கள் தீர இன்பங்கள் கொடுப்பர் போலும்
கூத்தராய்ப் பாடி யாடிக் கொடுவலி அரக்கன் தன்னை
ஆர்த்தவாய் அலறு விப்பார் ஆவடு துறைய னாரே. க0

திருச்சிற்றம்பலம்

---

## 57. திருஆவடுதுறை : திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

மஞ்சனே மணியு மானாய் மரகதத் திரளு மானாய்
நெஞ்சுளே புகுந்து நின்று நினைதரு நிகழ்வி னானே
துஞ்சும்போ தாக வந்து துணையெனக் காகி நின்று
அஞ்சலென் றருள வேண்டும் ஆவடு துறையு ளானே. க

நானுகந் துன்னை நாளும் நணுகுமா கருதி ஏயும்
ஊனுகந் தோம்பு நாயேன் உள்ளுற ஐவர் நின்றார்
தானுகந் தேற கந்த தகவிலாத் தொண்ட னேன்நான்
ஆனுகந் தேறு வானே ஆவடு துறையு ளானே. உ

கட்டமே வினைக ளான காத்திவை நோக்கி ஆளாய்
ஓட்டவே யொட்டி நாளும் உன்னையுள் வைக்க மாட்டேன்
பட்டவான் தலைகை ஏந்திப் பலிதிரிந் தூர்கள் தோறும்
அட்டமா உருவி னானே ஆவடு துறையு ளானே. ந

பெருமைநன் றுடைய தில்லை என்றுநான் பேச மாட்டேன்
ஒருமையால் உன்னை உள்கி உகந்துவான் ஏற மாட்டேன்

கருமையிட் டாய வூனைக் கட்டமே கழிக்கின் றேன்நான்
அருமையால் நஞ்ச முண்ட ஆவடு துறையு ளானே. ௪

துட்டனாய் வினைய தென்னுஞ் சுழித்தலை யகப்பட் டேனைக்
கட்டனா ஐவர் வந்து கலக்காமைக் காத்துக் கொள்ளாய்
மட்டவிழ் கோதை தன்னை மகிழ்ந்தொரு பாகம் வைத்து
அட்டமா நாக மாட்டும் ஆவடு துறையு ளானே. ௫

காரழல் கண்ட மேயாய் கடிமதிற் புரங்கள் மூன்றும்
ஓரழல் அம்பி னாலே உகைத்துத்தீ எரிய மூட்டி
நீரழற் சடையு ளானே நினைப்பவர் வினைகள் தீர்ப்பாய்
ஆரழல் ஏந்தி ஆடும் ஆவடு துறையு ளானே. ௬

செறிவிலேன் சிந்தை யுள்ளே சிவனடி தெரிய மாட்டேன்
குறியிலேன் குணமொன் றில்லேன் கூறுமா கூற மாட்டேன்
நெறிபடு மதியொன் றில்லேன் நினையுமா நினைய மாட்டேன்
அறிவிலேன் அயர்த்துப் போனேன் ஆவடு துறையு ளானே. ௭

கோலமா மங்கை தன்னைக் கொண்டொரு கோல மாய
சீலமே யறிய மாட்டேன் செய்வினை மூடி நின்று
ஞாலமாம் இதனுள் என்னை நைவியா வண்ணம் நல்காய்
ஆலமா நஞ்ச முண்ட ஆவடு துறையு ளானே. ௮

நெடியவன் மலரி னானும் நேர்ந்திரு பாலும் நேடக்
கடியதோர் உருவ மாகிக் கனலெரி யாகி நின்ற
வடிவினை வண்ண மென்றே என்றுதாம் பேச லாகார்
அடியனேன் நெஞ்சி னுள்ளார் ஆவடு துறையு ளானே. ௯

மலைக்குநே ராய ரக்கன் சென்றுற மங்கை அஞ்சத்
தலைக்குமேற் கைக ளாலே தாங்கினான் வலியை மாள
உலப்பிலா விரலால் ஊன்றி ஒறுத்தவற் கருள்கள் செய்து
அலைத்தவான் கங்கை சூடும் ஆவடு துறையு ளானே. ௧௦

திருச்சிற்றம்பலம்

## 58. திருப்பருப்பதம் : திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

கன்றினார் புரங்கள் மூன்றுங் கனலெரி யாகச் சீறி
நின்றதோர் உருவந் தன்னால் நீர்மையும் நிறையுங் கொண்டு
ஒன்றியாங் குமையுந் தாமும் ஊர்பலி தேர்ந்து பின்னும்
பன்றிப்பின் வேட ராகிப் பருப்பத நோக்கி னாரே. ௧

கற்றமா மறைகள் பாடிக் கடைதொறும் பலியுந் தேர்வார்
வற்றலோர் தலைகை ஏந்தி வானவர் வணங்கி வாழ்த்த
முற்றவோர் சடையில் நீரை ஏற்றமுக் கண்ணர் தம்மைப்
பற்றினார்க் கருள்கள் செய்து பருப்பத நோக்கி னாரே. ௨

கரவிலா மனத்த ராகிக் கைதொழு வார்கட் கென்றும்
இரவுநின் றெரிய தாடி இன்னருள் செய்யும் எந்தை
மருவலார் புரங்கள் மூன்று மாட்டிய வகைய ராகிப்
பரவுவார்க் கருள்கள் செய்து பருப்பத நோக்கி னாரே. ௩

கட்டிட்ட தலைகை ஏந்திக் கனலெரி யாடிச் சீறிச்
சுட்டிட்ட நீறு பூசிச் சுடுபிணக் காட ராகி
விட்டிட்ட வேட்கை யார்க்கு வேறிருந் தருள்கள் செய்து
பட்டிட்ட வுடைய ராகிப் பருப்பத நோக்கி னாரே. ௪

கையராய்க் கபாலம் ஏந்திக் காமனைக் கண்ணாற் காய்ந்து
மெய்யராய் மேனி தன்மேல் விளங்குவெண் ணீறு பூசி
உய்வராய் உள்கு வார்கட் குவகைகள் பலவுஞ் செய்து
பையரா அரையி லார்த்துப் பருப்பத நோக்கி னாரே. ௫

வேடராய் வெய்ய ராகி வேழத்தின் உரிவை போர்த்து
ஓடராய் உலக மெல்லாம் உழிதர்வர் உமையுந் தாமுங்
காடராய்க் கனல்கை ஏந்திக் கடியதோர் விடைமேல் கொண்டு
பாடராய்ப் பூதஞ் சூழப் பருப்பத நோக்கி னாரே. ௬

மேகம்போல் மிடற்ற ராகி வேழத்தின் உரிவை போர்த்து
ஏகம்பம் மேவி னார்தாம் இமையவர் பரவி ஏத்தக்
காகம்பர் கழற ராகிக் கடியதோர் விடையொன் றேறிப்
பாகம்பெண் ணுருவ மானார் பருப்பத நோக்கி னாரே. ௭

பேரிடர்ப் பிணிகள் தீர்க்கும் பிஞ்ஞகன் எந்தை பெம்மான்
காருடைக் கண்ட ராகிக் கபாலமோர் கையி லேந்திச்
சீருடைச் செங்கண் வெள்ளே றேறிய செல்வர் நல்ல
பாரிடம் பாணி செய்யப் பருப்பத நோக்கி னாரே. ௮

அங்கண்மா லுடைய ராய ஐவரால் ஆட்டு ணாதே
உங்கண்மால் தீர வேண்டில் உள்ளத்தால் உள்கி ஏத்துஞ்
செங்கண்மால் பரவி ஏத்திச் சிவனென நின்ற செல்வர்
பைங்கண்வெள் ளேற தேறிப் பருப்பத நோக்கி னாரே. ௯

அடல்விடை யூர்தி யாகி அரக்கன்தோள் அடர வூன்றிக்
கடலிடை நஞ்ச முண்ட கறையணி கண்ட னார்தாஞ்
சுடர்விடு மேனி தன்மேற் சுண்ணவெண் ணீறு பூசிப்
படர்சடை மதியஞ் சேர்த்திப் பருப்பத நோக்கி னாரே. ௧௦

திருச்சிற்றம்பலம்

---

## 59. திருஅவளிவணல்லூர் : திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

தோற்றினான் எயிறு கவ்வித் தொழிலுடை அரக்கன் தன்னைத்
தேற்றுவான் சென்று சொல்லச் சிக்கெனத் தவிரு மென்று
வீற்றினை யுடைய னாகி வெடுவெடுத் தெழுந்த வன்றன்
ஆற்றலை யழிக்க வல்லார் அவளிவ ணல்லூ ராரே. ௧

வெம்பினார் அரக்க ரெல்லாம் மிகச்சழக் காயிற் றென்று
செம்பினால் எடுத்த கோயில் சிக்கெனச் சிதையு மென்ன
நம்பினார் என்று சொல்லி நன்மையான் மிக்கு நோக்கி
அம்பினால் அழிய எய்தார் அவளிவ ணல்லூ ராரே. ௨

கீழ்ப்படக் கருத லாமோ கீர்த்திமை யுள்ள தாகில்
தோட்பெரு வலியி னாலே தொலைப்பன்யான் மலையையென்று
வேட்பட வைத்த வாறே விதிர்விதிர்த் தரக்கன் வீழ்ந்து
ஆட்படக் கருதிப் புக்கார் அவளிவ ணல்லூ ராரே. ௩

நிலைவலம் வல்லன் அல்லன் நேர்மையை நினைய மாட்டான்
சிலைவலங் கொண்ட செல்வன் சீரிய கயிலை தன்னைத்

தலைவலங் கருதிப் புக்குத் தாக்கினன் தன்னை யன்று
அலைகுலை யாக்கு வித்தார் அவளிவ ணல்லூ ராரே. ரு

தவ்வலி யொன்ற னாகித் தனதொரு பெருமை யாலே
மெய்வ்வலி யுடைய னென்று மிகப்பெருந் தேரை யூர்ந்து
செவ்வலி கூர்வி ழியாற் சிரமத்தால் எடுக்குற் றானை
அவ்வலி தீர்க்க வல்லார் அவளிவ ணல்லூ ராரே. சு

நன்மைதான் அறிய மாட்டான் நடுவிலா அரக்கர் கோமான்
வன்மையே கருதிச் சென்று வலிதனைச் செலுத்த லுற்றுக்
கன்மையான் மலையை ஓடிக் கருதித்தான் எடுத்து வாயால்
அம்மையோ என்ன வைத்தார் அவளிவ ணல்லூ ராரே. சு

கதம்படப் போது வார்கள் போதும்அக் கருத்தி னாலே
சிதம்பட நின்ற நீர்கள் சிக்கெனத் தவிரு மென்று
மதம்படு மனத்த னாகி வன்மையான் மிக்கு நோக்க
அதம்பழத் துருவு செய்தார் அவளிவ ணல்லூ ராரே. எ

நாடுமிக் குழிதர் கின்ற நடுவிலா அரக்கர் கோனை
ஓடுமிக் கென்று சொல்லி ஊன்றினன் உகிரி னாலே
பாடுமிக் குய்வ னென்று பணியநற் றிறங்கள் காட்டி
ஆடுமிக் கரவம் பூண்டார் அவளிவ ணல்லூ ராரே. அ

ஏனமாய் இடந்த மாலும் எழில்தரு முளரி யானும்
ஞானந்தா னுடைய ராகி நன்மையை அறிய மாட்டார்
சேனந்தான் இலாஅ ரக்கன் செழுவரை எடுக்க லூன்றி
ஆனந்த அருள்கள் செய்தார் அவளிவ ணல்லூ ராரே. சு

ஊக்கினன் மலையை ஓடி உணர்விலா அரக்கன் தன்னைத்
தாக்கினன் விரலி னாலே தலைபத்தும் தகர வூன்றி
நோக்கினன் அஞ்சத் தன்னை நோன்பிற வூன்று சொல்லி
ஆக்கினர் அமுத மாக அவளிவ ணல்லூ ராரே. கo

திருச்சிற்றம்பலம்

## 60. திருப்பேருவேளூர் : திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

மறையணி நாவி னானை மறப்பிலார் மனத்து ளானைக்
கறையணி கண்டன் தன்னைக் கனலெரி யாடி னானைப்
பிறையணி சடையி னானைப் பெருவேளூர் பேணி னானை
நறையணி மலர்கள் தூவி நாடொறும் வணங்கு வேனே. க

நாதனாய் உலக மெல்லாம் நம்பிரான் எனவும் நின்ற
பாதனாம் பரம யோகி பலபல திறத்தி னாலும்
பேதனாய்த் தோன்றி னானைப் பெருவேளூர் பேணி னானை
ஓதநா வுடைய னாகி உரைக்குமா றுரைக்கின் றேனே. உ

குறவிதோள் மணந்த செல்வக் குமரவேள் தாதை என்றும்
நறவிள நறுமென் கூந்தல் நங்கையோர் பாகத் தானைப்
பிறவியை மாற்று வானைப் பெருவேளூர் பேணி னானை
உறவினால் வல்ல னாகி உணருமா றுணர்த்து வேனே. ௩

மைஞ்ஞவில் கண்டன் தன்னை வலங்கையின் மழுவொன் றேந்
கைஞ்ஞவில் மானி னோடுங் கனலெரி ஆடி னானைப் [திக்
பிஞ்ஞகன் தன்னை அந்தண் பெருவேளூர் பேணி னானைப்
பொய்ஞ்ஞெக நினைய மாட்டாப் பொறியிலா அறிவி லேனே.

ஓடைசேர் நெற்றி யானை உரிவையை மூடி னானை
வீடதே காட்டு வானை வேதநான் காயி னானைப்
பேடைசேர் புறவ நீங்காப் பெருவேளூர் பேணி னானைக்
கூடநான் வல்ல மாற்றங் குறுகுமா றறிகி லேனே. ரு

கச்சைசேர் நாகத் தானைக் கடல்விடங் கண்டத் தானைக்
கச்சிஏ கம்பன் தன்னைக் கனலெரி யாடு வானைப்
பிச்சைசேர்ந் துழல்வி னானைப் பெருவேளூர் பேணி னானை
இச்சைசேர்ந் தமர நாளும் இறைஞ்சுமா றிறைஞ்சு வேனே.

சித்தராய் வந்து தன்னைத் திருவடி வணங்கு வார்கள்
முத்தனை மூர்த்தி யாய முதல்வனை முழுது மாய
பித்தனைப் பிறரும் ஏத்தப் பெருவேளூர் பேணி னானை
மெத்தனே யவனை நாளும் விரும்புமா றறிகி லேனே. எ

முண்டமே தாங்கி னானை முற்றிய ஞானத் தானை
வண்டுலாங் கொன்றை மாலை வளர்மதிக் கண்ணி யானைப்
பிண்டமே ஆயி னானைப் பெருவேளூர் பேணி னானை
அண்டமாம் ஆதி யானை அறியுமா றறிகி லேனே. ௮

விரிவிலா அறிவி னார்கள் வேறொரு சமயஞ் செய்து
எரிவினாற் சொன்னா ரேனும் எம்பிராற் கேற்ற தாகும்
பரிவினாற் பெரியோ ரேத்தும் பெருவேளூர் பற்றி னானை
மருவிநான் வாழ்த்தி உய்யும் வகையது நினைக்கின் றேனே. ௯

பொருகடல் இலங்கை மன்னன் உடல்கெடப் பொருத்திநல்ல
கருகிய கண்டத் தானைக் கதிரிளங் கொழுந்து சூடும்
பெருகிய சடையி னானைப் பெருவேளூர் பேணி னானை
உருகிய அடிய ரேத்தும் உள்ளத்தால உள்கு வேனே. ௧௦

திருச்சிற்றம்பலம்

## 61. திருஇராமேச்சுரம் : திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

பாசமுங் கழிக்க கில்லா அரக்கரைப் படுத்துத் தக்க
வாசமிக் கலர்கள் கொண்டு மதியினால் மால்செய் கோயில்
நேசமிக் கன்பி னாலே நினைமின்நீர் நின்று நாளுந்
தேசமிக் கான்இ ருந்த திருஇரா மேச்சு ரமே. ௧

முற்றின நாள்கள் என்று முடிப்பதே கார ணமாய்
உற்றவன் போர்க ளாலே உணர்விலா அரக்கர் தம்மைச்
செற்றமால் செய்த கோயில் திருஇரா மேச்சு ரத்தைப்
பற்றிநீ பரவு நெஞ்சே படர்சடை ஈசன் பாலே. ௨

கடலிடை மலைகள் தம்மால் அடைத்துமால் கருமம் முற்றித்
திடலிடைச் செய்த கோயில் திருஇரா மேச்சு ரத்தைத்
தொடலிடை வைத்து நாவிற் சுழல்கின்றேன் தூய்மை யின்றி
உடலிடை நின்றும் போரா ஐவர்ஆட் டுண்டு நானே. ௩

குன்றுபோல் தோளு டைய குணமிலா அரக்கர் தம்மைக்
கொன்றுபோ ராழி யம்மால் வேட்கையாற் செய்த கோயில்

நன்றுபோல் நெஞ்ச மேநீ நன்மையை அறிதி யாயில்
சென்றுநீ தொழுதுய் கண்டாய் திருஇரா மேச்சு ரமே. ச

வீரமிக் கெயிறு காட்டி விண்ணுற நீண்ட ரக்கன்
கூரமிக் கவனைச் சென்று கொன்றுடன் கடற்ப டுத்துத்
தீரமிக் கான்இ ருந்த திருஇரா மேச்சு ரத்தைக்
கோரமிக் கார்த வத்தாற் கூடுவார் குறிப்பு ளாரே. ரு

ஆர்வலர் நம்மின் மிக்கார் என்றஅவ் வரக்கர் கூடிப்
போர்வலஞ் செய்து மிக்குப் பொருதவர் தம்மை வீட்டித்
தேர்வலஞ் செற்ற மால்செய் திருஇரா மேச்சு ரத்தைச்
சேர்மட நெஞ்ச மேநீ செஞ்சடை எந்தை பாலே. சா

வாக்கினால் இன்பு ரைத்து வாழ்கிலார் தம்மை எல்லாம்
போக்கினாற் புடைத்தவர்கள் உயிர்தனை யுண்டு மால்தான்
தேக்குநீர் செய்த கோயில் திருஇரா மேச்சு ரத்தை
நோக்கினால் வணங்கு வார்க்கு நோய்வினை நுணுகும் அன்றே.

பலவுநாள் தீமை செய்து பார்தன்மேற் குழுமி வந்து
கொலைவிலார் கொடிய ராய அரக்கரைக் கொன்று வீழ்த்த
சிலையினான் செய்த கோயில் திருஇரா மேச்சு ரத்தைத்
தலையினால் வணங்கு வார்கள் தாழ்வரார் தவம தாமே. அ

கோடிமா தவங்கள் செய்து குன்றினார் தம்மை எல்லாம்
வீடவே சக்க ரத்தால் எறிந்துபின் அன்பு கொண்டு
தேடிமால் செய்த கோயில் திருஇரா மேச்சு ரத்தை
நாடிவாழ் நெஞ்ச மேநீ நன்னெறி யாகு மன்றே. கூ

வன்கண்ணர் வாள ரக்கர் வாழ்வினை யொன்ற றியார்
புன்கண்ண ராகி நின்று போர்கள்செய் தாரை மாட்டிச்
செங்கண்மால் செய்த கோயில் திருஇரா மேச்சு ரத்தைத்
தங்கணால் எய்த வல்லார் தாழ்வராந் தலைவன் பாலே. கo

வரைகளொத் தேயு யர்ந்த மணிமுடி அரக்கர் கோனை
விரையமுற் றறவொ டுக்கி மீண்டுமால் செய்த கோயில்

திரைகள்முத் தால்வ ணங்கும் திருஇரா மேச்சு ரத்தை
உரைகள்பத் தாலு ரைப்பார் உள்குவார் அன்பி னாலே. கக

திருச்சிற்றம்பலம்

---

## 62. திருஆலவாய் : திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

வேதியா வேத கீதா விண்ணவ ரண்ணா என்றென்
றோதியே மலர்கள் தூவி ஒருங்கிநின் கழல்கள் காணப்
பாதியோர் பெண்ணை வைத்தாய் படர்சடை மதியஞ் சூடும்
ஆதியே ஆல வாயில் அப்பனே அருள்செ யாயே. க

நம்பனே நான்மு கத்தாய் நாதனே ஞான மூர்த்தீ
என்பொனே ஈசா என்றென் றேத்திநான் ஏசற் றென்றும்
பின்பினே திரிந்து நாயேன் பேர்த்தினிப் பிறவா வண்ணம்
அன்பனே ஆல வாயில் அப்பனே அருள்செ யாயே. உ

ஒருமருந் தாகி யுள்ளாய் உம்பரோ டுலகுக் கெல்லாம்
பெருமருந் தாகி நின்றாய் பேரமு தின்சு வையாய்க்
கருமருந் தாகி யுள்ளாய் ஆளும்வல் வினைகள் தீர்க்கும்
அருமருந் தால வாயில் அப்பனே அருள்செ யாயே. ங

செய்யநின் கமல பாதஞ் சேருமா தேவர் தேவே
மையணி கண்டத் தானே மான்மறி மழுவொன் றேந்துஞ்
சைவனே சால ஞானங் கற்றறி விலாத நாயேன்
ஐயனே ஆல வாயில் அப்பனே அருள்செ யாயே. ச

வெண்டலை கையில் ஏந்தி மிகவுமூர் பலிகொண் டென்றும்
உண்டது மில்லை சொல்லில் உண்டது நஞ்சு தன்னைப்
பண்டுனை நினைய மாட்டாப் பளகனேன் உளம தார
அண்டனே ஆல வாயில் அப்பனே அருள்செ யாயே. ரு

எஞ்சலில் புகலி தென்றென் றேத்திநான் ஏசற் றென்றும்
வஞ்சக மொன்று மின்றி மலரடி காணும் வண்ணம்
நஞ்சினை மிடற்றில் வைத்த நற்பொருட் பதமே நாயேற்
கஞ்சலென் றால வாயில் அப்பனே அருள்செ யாயே. சு

வழுவிலா துன்னை வாழ்த்தி வழிபடுந் தொண்ட னேன்உன்
செழுமலர்ப் பாதங் காணத் தெண்டிரை நஞ்ச முண்ட
குழகனே கோல வில்லீ கூத்தனே மாத்தா யுள்ள
அழகனே ஆல வாயில் அப்பனே அருள்செ யாயே. ௭

நறுமலர் நீருங் கொண்டு நாள்தொறும் ஏத்தி வாழ்த்திச்
செறிவன சித்தம் வைத்துத் திருவடி சேரும் வண்ணம்
மறிகடல் வண்ணன் பாகா மாமறை யங்க மாறும்
அறிவனே ஆல வாயில் அப்பனே அருள்செ யாயே. ௮

நலந்திகழ் வாயின் நூலாற் சருகிலைப் பந்தர் செய்த
சிலந்தியை அரச தாள அருளினாய் என்று திண்ணங்
கலந்துடன் வந்து நின்தாள் கருதிநான் காண்ப தாக
அலந்தனன் ஆல வாயில் அப்பனே அருள்செ யாயே. ௯

பொடிக்கொடு பூசிப் பொல்லாக் குரம்பையிற் புந்தி யொன்றிப்
பிடித்துநின் தாள்க ளென்றும் பிதற்றிநா னிருக்க மாட்டேன்
எடுப்பனென் றிலங்கைக் கோன்வந் தெடுத்தலு மிருப துதோள்
அடர்த்தனே ஆல வாயில் அப்பனே அருள்செ யாயே. ௧௦

திருச்சிற்றம்பலம்

---

## 63. திருவண்ணாமலை : திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

ஓதிமா மலர்கள் தூவி உமையவள் பங்கா மிக்க
சோதியே துளங்கும் எண்தோள் சுடர்மழுப் படையி னானே
ஆதியே அமரர் கோவே அணியணா மலையு ளானே
நீதியால் நின்னை யல்லால் நினையுமா நினைவி லேனே. ௧

பண்தனை வென்ற இன்சொற் பாவையோர் பங்கா நீல
கண்டனே கார்கொள் கொன்றைக் கடவுளே கமல பாதா
அண்டனே அமரர் கோவே அணியணா மலையு ளானே
தொண்டனேன் உன்னை யல்லாற் சொல்லுமா சொல்லி லேனே.

உருவமும் உயிரு மாகி ஓதிய உலகுக் கெல்லாம்
பெருவினைப் பிறப்பு வீடாய் நின்றஎம் பெருமான் மிக்க

அருவிபொன் சொரியும் அண்ணா மலையுளாய் அண்டர் கோவே
மருவிநின் பாத மல்லால் மற்றொரு மாடி லேனே. ரு

பைம்பொனே பவளக் குன்றே பரமனே பால்வெண் ணீற்றாய்
செம்பொனே மலர்செய் பாதா சீர்தரு மணியே மிக்க
அம்பொனே கொழித்து வீழும் அணியணா மலையு ளானே
எம்பொனே உன்னை அல்லால் யாதுநான் நினைவி லேனே. சு

பிறையணி முடியி னானே பிஞ்ஞகா பெண்ணோர் பாகா
மறைவலா இறைவா வண்டார் கொன்றையாய் வாம தேவா
அறைகழல் அமரர் ஏத்தும் அணியணா மலையு ளானே
இறைவனே உன்னை அல்லால் யாதுநான் நினைவி லேனே. எ

புரிசடை முடியின் மேலோர் பொருபுனற் கங்கை வைத்துக்
கரியுரி போர்வை யாகக் கருதிய கால காலா
அரிகுலம் மலிந்த அண்ணா மலையுளாய் அலரின் மிக்க
வரிமிகு வண்டு பண்செய் பாதநான் மறப்பி லேனே. சு

இரவியும் மதியும் விண்ணும் இருநிலம் புனலுங் காற்றும்
உரகமார் பவனம் எட்டுத் திசையொளி உருவ மானாய்
அரவுமிழ் மணிகொள் சோதி அணியணா மலையு ளானே
பரவுநின் பாத மல்லாற் பரமநான் பற்றி லேனே. ஏ

பார்த்தனுக் கன்று நல்கிப் பாசுப தத்தை ஈந்தாய்
நீர்த்ததும் புலாவு கங்கை நெடுமுடி நிலாவ வைத்தாய்
ஆர்த்துவந் தீண்டு கொண்டல் அணியணா மலையு ளானே
தீர்த்தனே நின்றன் பாதத் திறமலால் திறமி லேனே. அ

பாலுநெய் முதலா மிக்க பசுவில்ஐந் தாடு வானே
மாலுநான் முகனுங் கூடிக் காண்கிலா வகையுள் நின்றாய்
ஆலுநீர் கொண்டல் பூகம் அணியணா மலையு ளானே
வாலுடை விடையாய் உன்றன் மலரடி மறப்பி லேனே. கூ

இரக்கமொன் றியாது மில்லாக் காலனைக் கடிந்த எம்மான்
உரத்தினால் வரையை ஊக்க ஒருவிரல் நுதியி னாலே
அரக்கனை நெரித்த அண்ணா மலையுளாய் அமரர் ஏறே
சிரத்தினால் வணங்கி ஏத்தித் திருவடி மறப்பி லேனே. கo

திருச்சிற்றம்பலம்

## 64. திருவீழிமிழலை : திருநேரிசை

*திருச்சிற்றம்பலம்*

பூதத்தின் படையர் பாம்பின் பூணினர் பூண நூலர்
சீதத்திற் பொலிந்த திங்கட் கொழுந்தர்நஞ் சழுந்து கண்டர்
கீதத்திற் பொலிந்த ஓசைக் கேள்வியர் வேள்வி யாளர்
வேதத்தின் பொருளர் வீழி மிழலையுள் விகிர்த னாரே. ௧

காலையிற் கதிர்செய் மேனி கங்குலிற் கறுத்த கண்டர்
மாலையில் மதியஞ் சேர்ந்த மகுடத்தர் மதுவும் பாலும்
ஆலையிற் பாகும் போல அண்ணித்திட் டடியார்க் கென்றும்
வேலையின் அமுதர் வீழி மிழலையுள் விகிர்த னாரே. ௨

வருந்தின நெருநல் இன்றாய் வழங்கின நாளர் ஆல்கீழ்
இருந்துநன் பொருள்கள் நால்வர்க் கியம்பினர் இருவ ரோடும்
பொருந்தினர் பிரிந்து தம்பாற் பொய்யரா மவர்கட் கென்றும்
விருந்தினர் திருந்து வீழி மிழலையுள் விகிர்த னாரே. ௩

நிலையிலா வூர்மூன் றொன்ற நெருப்பெரி காற்றம் பாகச்
சிலையுநா ணதுவு நாகங் கொண்டவர் தேவர் தங்கள்
தலையினால் தரித்த என்புந் தலைமயிர் வடமும் பூண்ட
விலையிலா வேடர் வீழி மிழலையுள் விகிர்த னாரே. ௪

மறையிடைப் பொருளர் மொட்டின் மலர்வழி வாசத் தேனர்
கறவிடைப் பாலின் நெய்யர் கரும்பினிற் கட்டி யாளர்
பிறையிடைப் பாம்புகொன்றைப் பிணையல்சேர் சடையுள்நீரர்
விறகிடைத் தீயர் வீழி மிழலையுள் விகிர்த னாரே. ௫

எண்ணகத் தில்லை அல்லர் உளரல்லர் இமவான் பெற்ற
பெண்ணகத் தரையர் காற்றில் பெருவலி யிருவ ராகி
மண்ணகத் தைவர் நீரில் நால்வர்தீ யதனில் மூவர்
விண்ணகத் தொருவர் வீழி மிழலையுள் விகிர்த னாரே. ௬

சந்தணி கொங்கை யாளோர் பங்கினர் சாம வேதர்
எந்தையும் எந்தை தந்தை தந்தையு மாய ஈசர்
அந்தியோ டுதயம் அந்த ணாளர்ஆன் நெய்யால் வேட்கும்
வெந்தழ லுருவர் வீழி மிழலையுள் விகிர்த னாரே. ௭

நீற்றினை நிறையப் பூசி நித்தலா யிரம்பூக் கொண்டு
ஏற்றுழி ஒருநா ளொன்று குறையக்கண் நிறைய விட்ட
ஆற்றலுக் காழி நல்கி அவன்கொணர்ந் திழிச்சுங் கோயில்
வீற்றிருந் தளிப்பர் வீழி மிழலையுள் விகிர்த னாரே. அ

சித்திசெய் பவர்கட் கெல்லாஞ் சேர்விடஞ் சென்று கூடப்
பத்திசெய் பவர்கள் பாவம் பறைப்பவர் இறப்பி லாளர்
முத்திசெய் பவள மேனி முதிரொளி நீல கண்டர்
வித்தினில் முளையர் வீழி மிழலையுள் விகிர்த னாரே. கூ

தருக்கின அரக்கன் தேரூர் சாரதி தடைநி லாது
பொருப்பினை எடுத்த தோளும் பொன்முடி பத்தும் புண்ணாய்
நெரிப்புண்டங் கலறி மீண்டு நினைந்தடி பரவத் தம்வாள்
விருப்பொடுங் கொடுப்பர் வீழி மிழலையுள் விகிர்த னாரே. கம

திருச்சிற்றம்பலம்

---

## 65. திருச்சாய்க்காடு : திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

தோடுலா மலர்கள் தூவித் தொழுதெழு மார்க்கண் டேயன்
வீடுநாள் அணுகிற் றென்று மெய்கொள்வான் வந்த காலன்
பாடுதான் செலலும் அஞ்சிப் பாதமே சரண மென்னச்
சாடினார் காலன் மாளச் சாய்க்காடு மேவி னாரே. க

வடங்கெழு மலைமத் தாக வானவர் அசுர ரோடு
கடைந்திட எழுந்த நஞ்சங் கண்டுபஃ றேவர் அஞ்சி
அடைந்துநுஞ் சரணம் என்ன அருள்பெரி துடைய ராகித்
தடங்கடல் நஞ்சம் உண்டார் சாய்க்காடு மேவி னாரே. உ

அரணிலா வெளிய நாவல் அருநிழ லாக ஈசன்
வரணிய லாகித் தன்வாய் நூலினாற் பந்தர் செய்ய
முரணிலாச் சிலந்தி தன்னை முடியுடை மன்ன னாக்கித்
தரணிதா னாள வைத்தார் சாய்க்காடு மேவி னாரே. ௩

அரும்பெருஞ் சிலைக்கை வேட னாய்விறற் பார்த்தற் கன்று
உரம்பெரி துடைமை காட்டி ஒள்ளமர் செய்து மீண்டே

வரம்பெரி துடைய னுக்கி வாளமர் முகத்தின் மன்னுஞ்
சரம்பொலி தூணி ஈந்தார் சாய்க்காடு மேவி னாரே. ச

இந்திரன் பிரமன் அங்கி எண்வகை வசுக்க ளோடு
மந்திர மறைய தோதி வானவர் வணங்கி வாழ்த்தத்
தந்திரம் அறியாத் தக்கன் வேள்வியைத் தகர்த்த ஞான்று
சந்திரற் கருளிச் செய்தார் சாய்க்காடு மேவி னாரே. ரு

ஆமலி பாலும் நெய்யும் ஆட்டிஅர்ச் சனைகள் செய்து
பூமலி கொன்றை சூட்டப் பொறுததன் தாதை தாளைக்
கூர்மழு வொன்றால் ஓச்சக் குளிர்சடைக் கொன்றை மாலைத்
தாமநற் சண்டிக் கீந்தார் சாய்க்காடு மேவி னாரே. சு

மையறு மனத்த னாய பகீரதன் வரங்கள் வேண்ட
ஐயமில் அமரர் ஏத்த ஆயிர முகம தாகி
வையகம் நெளியப் பாய்வான் வந்திழி கங்கை யென்னுந்
தையலைச் சடையில் ஏற்றார் சாய்க்காடு மேவி னாரே. எ

குவப்பெருந் தடக்கைவேடன் கொடுஞ்சிலை இறைச்சிப் பாரம்
துவர்ப்பெருஞ் செருப்பால் நீக்கித் தூயவாய்க் கலசம் ஆட்ட
உவப்பெருங் குருதி சோர ஒருகணை யிடந்தங் கப்பத்
தவப்பெருந் தேவு செய்தார் சாய்க்காடு மேவி னாரே. அ

நக்குலா மலர்பன் னூறு கொண்டுநன் ஞானத் தோடு
மிக்கபூ சனைகள் செய்வான் மென்மல ரொன்று காணு(து)
ஒக்குமென் மலர்க்கண் என்றங் கொருகணை யிடந்தும் அப்பச்
சக்கரங் கொடுப்பர் போலுஞ் சாய்க்காடு மேவி னாரே. கூ

புயங்கள்ஐஞ் ஞான்கும் பத்து மாயகொண் டரக்க னோடிச்
சிவன்திரு மலையைப் பேர்க்கத் திருமலர்க் குழலி அஞ்ச
வியன்பெற எய்தி வீழ விரல்சிறி தூன்றி மீண்டே
சயம்பெற நாம மீந்தார் சாய்க்காடு மேவி னாரே. கய

திருச்சிற்றம்பலம்

---

## 66. திருநாகேச்சரம் : திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

கச்சைசேர் அரவர் போலுங் கறையணி மிடற்றர் போலும்
பிச்சைகொண் டுண்பர் போலும் பேரரு ளாளர் போலும்
இச்சையால் மலர்கள் தூவி இரவொடு பகலுந் தம்மை
நச்சுவார்க் கினியர் போலும் நாகஈச் சரவ னாரே. ௧

வேடுறு வேட னாகி விசயனோ டெய்தார் போலும்
காடுறு பதியர் போலுங் கடிபுனற் கங்கை நங்கை
சேடெறி சடையர் போலும் தீவினை தீர்க்க வல்ல
நாடறி புகழர் போலும் நாகஈச் சரவ னாரே. ௨

கற்றுணை வில்ல தாகக் கடிஅரண் செற்றார் போலும்
பொற்றுணைப் பாதர் போலும் புலியத ளுடையர் போலும்
சொற்றுணை மாலை கொண்டு தொழுதெழு வார்கட் கெல்லாம்
நற்றுணை யாவர் போலும் நாகஈச் சரவ னாரே. ௩

கொம்பனாள் பாகர் போலுங் கொடியுடை விடையர் போலும்
செம்பொனா ருருவர் போலுந் திகழ்திரு நீற்றர் போலும்
எம்பிரான் எம்மை யாளும் இறைவனே என்று தம்மை
நம்புவார்க் கன்பர் போலும் நாகஈச் சரவ னாரே. ௪

கடகரி யுரியர் போலுங் கனல்மழு வாளர் போலும்
படவர வரையர் போலும் பாரிடம் பலவுங் கூடிக்
குடமுடை முழவம் ஆர்ப்பக் கூளிகள் பாட நாளும்
நடநவில் அடிகள் போலும் நாகஈச் சரவ னாரே. ௫

பிறையுறு சடையர் போலும் பெண்ணொரு பாகர் போலும்
மறையுறு மொழியர் போலும் மால்மறை யவன்றன் னோடு
முறைமுறை அமரர் கூடி முடிகளால் வணங்க நின்ற
நறவமர் கழலர் போலும் நாகஈச் சரவ னாரே. ௬

வஞ்சகர்க் கரியர் போலும் மருவினோர்க் கெளியர் போலும்
குஞ்சரத் துரியர் போலுங் கூற்றினைக் குமைப்பர் போலும்
விஞ்சையர் இரிய அன்று வேலைவாய் வந்தெ ழுந்த
நஞ்சணி மிடற்றர் போலும் நாகஈச் சரவ னாரே. ௭

போகமார் மோடி கொங்கை புணர்தரு புனிதர் போலும்
வேகமார் விடையர் போலும் வெண்பொடி யாடும் மேனிப்
பாகம்மா லுடையர் போலும் பருப்பத வில்லர் போலும்
நாகநா ணுடையர் போலும் நாகஈச் சரவ னாரே. அ

கொக்கரை தாளம் வீணை பாணிசெய் குழகர் போலும்
அக்கரை யணிவர் போலும் ஐந்தலை யரவர் போலும்
வக்கரை யமர்வர் போலும் மாதரை மையல் செய்யும்
நக்கரை யுருவர் போலும் நாகஈச் சரவ னாரே. கூ

வின்மையாற் புரங்கள்மூன்றும் வெந்தழல் விரித்தார்போலும்
தன்மையால் அமரர் தங்கள் தலைவர்க்குந் தலைவர் போலும்
வன்மையால் மலையெ டுத்தான் வலியினைத் தொலைவித் தாங்கே
நன்மையால் அளிப்பர் போலும் நாகஈச் சரவ னாரே. கO

திருச்சிற்றம்பலம்

---

## 67. திருக்கோண்டீச்சரம் : திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

வரைகிலேன் புலன்கள் ஐந்தும் வரைகிலாப் பிறவி மாயப்
புரையிலே அடங்கி நின்று புறப்படும் வழியுங் காணேன்
அரையிலே மிளிரு நாகத் தண்ணலே அஞ்ச லென்னாய்
திரையுலாம் பழன வேலித் திருக்கொண்டீச் சரத்து ளானே.

தொண்டனேன் பிறந்து வாளா தொல்வினைக் குழியில்வீழ்ந்து
பிண்டமே சுமந்து நைந்து போர்வதோர் வழியுங் காணேன்
அண்டனே அண்ட வாணா அறிவனே அஞ்சல் என்னாய்
தெண்டிரைப் பழனஞ் சூழ்ந்த திருக்கொண்டீச் சரத்து ளானே.

கால்கொடுத் தெலும்பு மூட்டிக் கதிர்நரம் பாக்கை யார்த்துத்
தோலுடுத் துதிரம் அட்டித் தொகுமயிர் மேய்ந்த கூரை
ஓலெடுத் துழைஞர் கூடி ஒளிப்பதற் கஞ்சு கின்றேன்
சேலுடைப் பழனஞ் சூழ்ந்த திருக்கொண்டீச் சரத்து ளானே.

கூட்டமாய் ஐவர் வந்து கொடுந்தொழிற் குணத்த ராகி
ஆட்டுவார்க் காற்ற கில்லேன் ஆடர வசைத்த கோவே

காட்டிடை யரங்க மாக ஆடிய கடவு ளேயோ
சேட்டிரும் பழன வேலித் திருக்கொண்டீச் சரத்து ளானே.

பொக்கமாய் நின்ற பொல்லாப் புழுமிடை முடைகொள் ஆக்கை
தொக்குநின் றைவர் தொண்ணூற் றறுவருந் துயக்க மெய்த
மிக்குநின் றிவர்கள் செய்யும் வேதனைக் கலந்து போனேன்
செக்கரே திகழும் மேனித் திருக்கொண்டீச் சரத்து ளானே.

ஊனுலா முடைகொள் ஆக்கை உடைகல மாவ தென்றும்
மானுலா மழைக்க ணார்தம் வாழ்க்கையை மெய்யென் றெண்ணி
நானெலா மினைய காலம் நண்ணிலேன் எண்ண மில்லேன்
தேனுலாம் பொழில்கள் சூழ்ந்த திருக்கொண்டீச் சரத்து ளானே.

சாணிரு மருங்கு நீண்ட சழக்குடைப் பதிக்கு நாதர்
வாணிகர் ஐவர் தொண்ணூற் றறுவரும் மயக்கஞ் செய்து
பேணிய பதியி னின்று பெயரும்போ தறிய மாட்டேன்
சேணுயர் மாட நீடு திருக்கொண்டீச் சரத்து ளானே. எ

பொய்ம்மறித் தியற்றி வைத்துப் புலால்கமழ் பண்டம்பெய்து
மைம்மறித் தியற்றி யன்ன பாங்கிலாக் குரம்பை நின்று
கைம்மறித் தனைய ஆவி கழியும்போ தறிய மாட்டேன்
செந்நெறிச் செலவு காணேன் திருக்கொண்டீச் சரத்துளானே.

பாலனாய்க் கழிந்த நாளும் பனிமலர்க் கோதை மார்தம்
மேலனாய்க் கழிந்த நாளும் மெலிவோடு மூப்பு வந்து
கோலனாய்க் கழிந்த நாளும் குறிக்கோளி லாது கெட்டேன்
சேலுலாம் பழன வேலித் திருக்கொண்டீச் சரத்து ளானே.

விரைதரு கருமென் கூந்தல் விளங்கிழை வேலொண் கண்ணாள்
வெருவர இலங்கைக் கோமான் விலங்கலை எடுத்த ஞான்று
பருவரை யனைய தோளும் முடிகளும் பாறி வீழத்
திருவிரல் ஊன்றி னானே திருக்கொண்டீச் சரத்து ளானே.

திருச்சிற்றம்பலம்

## 68. திருஆலங்காடு : திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

வெள்ளநீர்ச் சடையர் போலும் விரும்புவார்க் கெளியர் போலும்
உள்ளுளே உருகி நின்றங் குகப்பவர்க் கன்பர் போலும்
கள்ளமே வினைக ளெல்லாங் கரிசறுத் திடுவர் போலும்
அள்ளல்அம் பழனை மேய ஆலங்காட் டடிக ளாரே. க

செந்தழ லுருவர் போலுஞ் சினவிடை யுடையர் போலும்
வெந்தவெண் ணீறுகொண்டு மெய்க்கணிந் திடுவர் போலும்
மந்தமாம் பொழிற்ப ழனை மல்கிய வள்ளல் போலும்
அந்தமில் அடிகள் போலும் ஆலங்காட் டடிக ளாரே. உ

கண்ணினாற் காம வேளைக் கனலெழ விழிப்பர் போலும்
எண்ணிலார் புரங்கள் மூன்றும் எரியுணச் சிரிப்பர் போலும்
பண்ணினார் முழவம் ஓவாப் பைம்பொழிற் பழனை மேய
அண்ணலார் எம்மை ஆளும் ஆலங்காட் டடிக ளாரே. ௩

காறிடு விடத்தை யுண்ட கண்டர்எண் தோளர் போலும்
தூறிடு சுடலை தன்னிற் சுண்ணவெண் ணீற்றர் போலும்
கூறிடும் உருவர் போலுங் குளிர்பொழிற் பழனை மேய
ஆறிடு சடையர் போலும் ஆலங்காட் டடிக ளாரே. ௪

பார்த்தனோ டமர்பொ ருது பத்திமை காண்பர் போலும்
கூர்த்தவாய் அம்பு கோத்துக் குணங்களை அறிவர் போலும்
பேர்த்துமோ ராவ நாழி அம்பொடுங் கொடுப்பர் போலும்
தீர்த்தமாம் பழனை மேய திருஆலங் காட னாரே. ௫

வீட்டினார் சுடுவெண் ணீறு மெய்க்கணிந் திடுவர் போலும்
காட்டில்நின் றாடல் பேணுங் கருத்தினை யுடையர் போலும்
பாட்டினார் முழவம் ஓவாப் பைம்பொழிற் பழனை மேயார்
ஆட்டினார் அரவந் தன்னை ஆலங்காட் டடிக ளாரே. ௬

தாளுடைச் செங்க மலத் தடங்கொள்சே வடியர் போலும்
நாளுடைக் காலன் வீழ உதைசெய்த நம்பர் போலும்
கோளுடைப் பிறவி தீர்ப்பார் குளிர்பொழிற் பழனை மேய
ஆளுடை அண்ணல் போலும் ஆலங்காட் டடிக ளாரே. எ

கூடினார் உமைதன் னோடே குறிப்புடை வேடங் கொண்டு
சூடினார் கங்கை யாளைச் சுவறிடு சடையர் போலும்
பாடினார் சாம வேதம் பைம்பொழிற் பழனை மேயார்
ஆடினார் காளி காண ஆலங்காட் டடிக ளாரே. அ

வெற்றரைச் சமண ரோடு விலையுடைக் கூறை போர்க்கும்
ஒற்றரைச் சொற்கள்கொள்ளார் குணங்களை உகப்பர்போலும்
பெற்றமே உகந்தங் கேறும் பெருமையை உடையர் போலும்
அற்றங்கள் அறிவர் போலும் ஆலங்காட் டடிக ளாரே. கூ

மத்தனாய் மலையெ டுத்த அரக்கனைக் கரத்தோ டொல்க
ஒத்தினார் திருவி ரலால் ஊன்றியிட் டருள்வர் போலும்
பத்தர்தம் பாவந் தீர்க்கும் பைம்பொழிற் பழனை மேய
அத்தனார் நம்மை ஆள்வார் ஆலங்காட் டடிக ளாரே. கo

திருச்சிற்றம்பலம்

---

## 69. திருக்கோவலூர் வீரட்டம் : திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

செத்தையேன் சிதம்ப நாயேன் செடியனேன் அழுக்குப் பாயும்
பொத்தையே போற்றி நாளும் புகலிடம் அறிய மாட்டேன்
எத்தைநான் பற்றி நிற்கேன் இருளற நோக்க மாட்டாக்
கொத்தையேன் செய்வ தென்னே கோவல்வீ ரட்ட னீரே. க

தலைசுமந் திருகை நாற்றித் தரணிக்கே பொறைய தாகி
நிலையிலா நெஞ்சந் தன்னுள் நித்தலும் ஐவர் வேண்டும்
விலைகொடுத் தறுக்க மாட்டேன் வேண்டிற்றே வேண்டி எய்த்தேன்
குலைகொள்மாங் கனிகள் சிந்துங் கோவல்வீ ரட்ட னீரே. உ

வழித்தலைப் படவு மாட்டேன் வைகலுந் தூய்மை செய்து
பழித்திலேன் பாசம் அற்றுப் பரமநான் பரவ மாட்டேன்
இழித்திலேன் பிறவி தன்னை என்னினைந் திருக்க மாட்டேன்
கொழித்துவந் தலைக்குந் தெண்ணீர்க் கோவல்வீ ரட்ட னீரே.

சுற்றுவர் ஐவர் வந்து சந்தித்த குடிமை வேண்டிக்
காற்றுவர் கனலம் பேசிக் கண்செவி மூக்கு வாயுள்

ஆற்றுவர் அலந்து போனேன் ஆதியை அறிவொன் றின்றிக்
கூற்றுவர் வாயிற் பட்டேன் கோவல்வீ ரட்ட னீரே. ௪

தடுத்திலேன் ஐவர் தம்மைத் தத்துவத் துயர்வு நீர்மைப்
படுத்திலேன் பரப்பு நோக்கிப் பன்மலர்ப் பாத முற்ற
அடுத்திலேன் சிந்தை யார ஆர்வலித் தன்பு திண்ணங்
கொடுத்திலேன் கொடிய வாநான் கோவல்வீ ரட்ட னீரே. ௫

மாச்செய்த குரம்பை தன்னை மண்ணிடை மயக்க மெய்து
நாச்செய்து நாலும் ஐந்தும் நல்லன வாய்தல் வைத்துக்
காச்செய்த காயந் தன்னுள் நித்தலும் ஐவர் வந்து
கோச்செய்து குமைக்க ஆற்றேன் கோவல்வீ ரட்ட னீரே. ௬

படைகள்போல் வினைகள் வந்து பற்றிஎன் பக்கல் நின்றும்
விடகிலா ஆத லாலே விகிர்தனை விரும்பி ஏத்தும்
இடையிலேன் என்செய் கேன்நான் இரப்பவர் தங்கட் கென்றுங்
கொடையிலேன் கொள்வ தென்னே கோவல்வீ ரட்ட னீரே.

பிச்சிலேன் பிறவி தன்னைப் பேதையேன் பிணக்க மென்னுந்
துச்சுளே யழுந்தி வீழ்ந்து துயரமே இடும்பை தன்னுள்
அச்சனை ஆதி மூர்த்திக் கன்பனாய் வாழ மாட்டாக்
கொச்சையேன் செய்வ தென்னே கோவல்வீ ரட்ட னீரே. அ

நிணத்திடை யாக்கை பேணி நியமஞ்செய் திருக்க மாட்டேன்
மணத்திடை ஆட்டம் பேசி மக்களே சுற்ற மென்னுங்
கணத்திடை ஆட்டப் பட்டுக் காதலால் உன்னைப் பேணுங்
குணத்திடை வாழ மாட்டேன் கோவல்வீ ரட்ட னீரே. ௯

விரிகடல் இலங்கைக் கோனை வியன்கயி லாயத் தின்கீழ்
இருபது தோளும் பத்துச் சிரங்களும் நெரிய வூன்றிப்
பரவிய பாடல் கேட்டுப் படைகொடுத் தருளிச் செய்தார்
குரவொடு கோங்கு சூழ்ந்த கோவல்வீ ரட்ட னாரே. ௧௦

திருச்சிற்றம்பலம்

## 70. திருநனிபள்ளி : திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

முற்றுணை யாயி னானை மூவர்க்கு முதல்வன் தன்னைச்
சொற்றுணை யாயி னானைச் சோதியை ஆத ரித்து
உற்றுணர்ந் துருகி யூறி உள்கசி வுடைய வர்க்கு
நற்றுணை யாவர் போலும் நனிபள்ளி அடிக ளாரே. க

புலர்ந்தகால் பூவும் நீருங் கொண்டடி போற்ற மாட்டா
வலஞ்செய்து வாயின் நூலால் வட்டணைப் பந்தர் செய்த
சிலந்தியை அரைய னாக்கிச் சீர்மைகள் அருள வல்லார்
நலந்திகழ் சோலை சூழ்ந்த நனிபள்ளி அடிக ளாரே. உ

எண்பதும் பத்தும் ஆறும் என்னுளே இருந்து மன்னிக்
கண்பழக் கொன்று மின்றிக் கலக்கநான் அலக்க ழிந்தேன்
செண்பகந் திகழும் புன்னை செழுந்திரட் குரவம் வேங்கை
நண்புசெய் சோலை சூழ்ந்த நனிபள்ளி அடிக ளாரே. ந

பண்ணினார் பாட லாகிப் பழத்தினில் இரத மாகிக்
கண்ணினார் பார்வை யாகிக் கருத்தொடு கற்ப மாகி
எண்ணினார் எண்ண மாகி ஏழுல கனைத்து மாகி
நண்ணினார் வினைகள் தீர்ப்பார் நனிபள்ளி அடிக ளாரே. ச

துஞ்சிருள் காலை மாலைத் தொடர்ச்சியை மறந்தி ராதே
அஞ்செழுத் தோதின் நாளும் அரனடிக் கன்ப தாகும்
வஞ்சனைப் பால்சோ றாக்கி வழக்கிலா அமணர் தந்த
நஞ்சமு தாக்கு வித்தார் நனிபள்ளி அடிக ளாரே. ரு

செம்மலர்க் கமலத் தோனுந் திருமுடி காண மாட்டான்
அம்மலர்ப் பாதங் காண்பான் ஆழியான் அகழ்ந்துங் காணான்
நின்மலன் என்றங் கேத்தும் நினைப்பினை அருளி நாளும்
நம்மலம் அறுப்பர் போலும் நனிபள்ளி அடிக ளாரே. சு

அரவத்தால் வரையைச் சுற்றி அமரரோ டசுரர் கூடி
அரவித்துக் கடையத் தோன்றும் ஆலநஞ் சமுதா வுண்டார்
விரவித்தம் அடிய ராகி வீடிலாத் தொண்டர் தம்மை
நரகத்தில் வீழ ஒட்டார் நனிபள்ளி அடிக ளாரே. எ

மண்ணுளே திரியும் போது வருவன பலவுங் குற்றம்
புண்ணுளே புரைபு ரையன் புழுப்பொதி பொள்ள லாக்கை. அ-கூ

பத்துமோர் இரட்டி தோளான் பாரித்து மலையெ டுக்கப்
பத்துமோர் இரட்டி தோள்கள் படருடம் படர வூன்றிப்
பத்துவாய் கீதம் பாடப் பரிந்தவற் கருள்கொ டுத்தார்
பத்தர்தாம் பரவி யேத்தும் நனிபள்ளிப் பரம னாரே. கய

திருச்சிற்றம்பலம்

---

## 71. திருநாகைக்காரோணம் : திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

மனைவிதாய் தந்தை மக்கள் மற்றுள சுற்ற மென்னும்
வினையுளே விழுந்த ழுந்தி வேதனைக் கிடமா காதே
கனையுமா கடல்சூழ் நாகை மன்னுகா ரோணத் தானை
நினையுமா வல்லீ ராகில் உய்யலாம் நெஞ்சி னீரே. க

வையனை வையம் உண்ட மால்அங்கந் தோள்மேற் கொண்ட
செய்யனைச் செய்ய போதில் திசைமுகன் சிரமொன் றேந்துங்
கையனைக் கடல்சூழ் நாகைக் காரோணங் கோயில் கொண்ட
ஐயனை நினைந்த நெஞ்சே அம்மநாம் உய்ந்த வாறே. உ

நிருத்தனை நிமலன் தன்னை நீள்நிலம் விண்ணின் மிக்க
விருத்தனை வேத வித்தை விளைபொருள் மூல மான
கருத்தனைக் கடல்சூழ் நாகைக் காரோணங் கோயில் கொண்ட
ஒருத்தனை உணர்த லால்நாம் உய்ந்தவா நெஞ்சி னீரே. ந

மண்தனை இரந்து கொண்ட மாயனோ டசுரர் வானோர்
தெண்திரை கடைய வந்த தீவிடந் தன்னை யுண்ட
கண்டனைக் கடல்சூழ் நாகைக் காரோணங் கோயில் கொண்ட
அண்டனை நினைந்த நெஞ்சே அம்மநாம் உய்ந்த வாறே. ச

நிறைபுனல் அணிந்த சென்னி நீணிலா அரவஞ் சூடி
மறையொலி பாடி யாடல் மயானத்து மகிழ்ந்த மைந்தன்
கறைமலி கடல்சூழ் நாகைக் காரோணங் கோயில் கொண்ட
இறைவனை நாளும் ஏத்த இடும்பைபோய் இன்ப மாமே. ரு

வெம்பனைக் கருங்கை யானை வெருவஅன் றுரிவை போர்த்த
கம்பனைக் காலற் காய்ந்த காலனை ஞாலம் ஏத்தும்
உம்பனை உம்பர் கோனை நாகைக்கா ரோணம் மேய
செம்பொனை நினைந்த நெஞ்சே திண்ணம்நாம் உய்ந்த வாறே.

வெங்கடுங் கானத் தேழை தன்னொடும் வேட னாய்ச்சென்
றங்கமர் மலைந்து பார்த்தற் கடுசரம் அருளி னானை
மங்கைமார் ஆடல் ஓவா மன்னுகா ரோணத் தானைக்
கங்குலும் பகலும் காணப் பெற்றுநாங் களித்த வாறே. எ

தெற்றினர் புரங்கள் மூன்றுந் தீயினில் விழவோ ரம்பால்
செற்றவெஞ் சிலையர் வஞ்சர் சிந்தையுட் சேர்வி லாதார்
கற்றவர் பயிலும் நாகைக் காரோணங் கருதி ஏத்தப்
பெற்றவர் பிறந்தார் மற்றுப் பிறந்தவர் பிறந்தி லாரே. அ-சு

கரும்பினி கடல்சூழ் நாகைக் காரோணர் கமல பாதத்
தொருவிரல் நுதிக்கு நில்லா தொண்டிறல் அரக்க னுக்கான்
இருதிற மங்கை மாரோ டெம்பிரான் செம்பொ னாகந்
திருவடி தரித்து நிற்கத் திண்ணம்நாம் உய்ந்த வாறே. க0

திருச்சிற்றம்பலம்

## 72. திருஇன்னம்பர் : திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

விண்ணவர் மகுட கோடி மிடைந்தசே வடியர் போலும்
பெண்ணொரு பாகர் போலும் பேடலி ஆணர் போலும்
வண்ணமால் அயனுங் காணா மால்வரை எரியர் போலும்
எண்ணுரு அநேகர் போலும் இன்னம்பர் ஈச னாரே. க

பன்னிய மறையர் போலும் பாம்பரை யுடையர் போலும்
துன்னிய சடையர் போலுந் தூமதி மத்தர் போலும்
மன்னிய மழுவர் போலும் மாதிடம் மகிழ்வர் போலும்
என்னையும் உடையர் போலும் இன்னம்பர் ஈச னாரே. உ

மறியொரு கையர் போலும் மாதுமை யுடையர் போலும்
பறிதலைப் பிறவி நீக்கிப் பணிகொள வல்லர் போலும்

செறிவுடை அங்க மாலை சேர்திரு வுருவர் போலும்
எறிபுனற் சடையர் போலும் இன்னம்பர் ஈச னாரே. ௩

விடம்மலி கண்டர் போலும் வேள்வினை அழிப்பர் போலும்
கடவுநல் விடையர் போலுங் காலனைக் காய்வர் போலும்
படம்மலி அரவர் போலும் பாய்புலித் தோலர் போலும்
இடர்களைந் தருள்வர் போலும் இன்னம்பர் ஈச னாரே. ௪

அளிமலர்க் கொன்றை துன்றும் அவிர்சடை யுடையர்போலும்
களிமயிற் சாய லோடுங் காமனை விழிப்பர் போலும்
வெளிவளர் உருவர் போலும் வெண்பொடி யணிவர்போலும்
எளியவர் அடியர்க் கென்றும் இன்னம்பர் ஈச னாரே. ௫

கணையமர் சிலையர் போலுங் கரியுரி உடையர் போலும்
துணையமர் பெண்ணர் போலுந் தூமணிக் குன்றர் போலும்
அணைவுடை யடியர் கூடி அன்பொடு மலர்கள் தூவும்
இணையடி உடையர் போலும் இன்னம்பர் ஈச னாரே. ௬

பொருப்பமர் புயத்தர் போலும் புனலணி சடையர் போலும்
மருப்பிள வாமை தாங்கு மார்பில்வெண் ணூலர் போலும்
உருத்திர மூர்த்தி போலும் உணர்விலார் புரங்கள் மூன்றும்
எரித்திடு சிலையர் போலும் இன்னம்பர் ஈச னாரே. ௭

காடிடம் உடையர் போலுங் கடிகுரல் விளியர் போலும்
வேடுரு வுடையர் போலும் வெண்மதிக் கொழுந்தர் போலும்
கோடலர் வன்னி தும்பை கொக்கிற கலர்ந்த கொன்றை
ஏடமர் சடையர் போலும் இன்னம்பர் ஈச னாரே. ௮

காறிடு விடத்தை யுண்ட கண்டர்எண் தோளர் போலும்
நீறுடை உருவர் போலும் நினைப்பினை அரியர் போலும்
பாறுடைத் தலைகை யேந்திப் பலிதிரிந் துண்பர் போலும்
ஏறுடைக் கொடியர் போலும் இன்னம்பர் ஈச னாரே. ௯

ஆர்த்தெழும் இலங்கைக்கோனை அருவரை அடர்ப்பர்போலும்
பார்த்தனோ டமர்பொருது படைகொடுத் தருள்வர் போலும்
தீர்த்தமாங் கங்கை தன்னைத் திருச்சடை வைப்பர் போலும்
ஏத்தவே ழுலகும் வைத்தார் இன்னம்பர் ஈச னாரே. ௧௦

திருச்சிற்றம்பலம்

## 73. திருச்சேறை : திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

பெருந்திரு இமவான் பெற்ற பெண்கொடி பிரிந்த பின்னை
வருந்துவான் தவங்கள் செய்ய மாமணம் புணர்ந்து மன்னும்
அருந்திரு மேனி தன்பால் அங்கொரு பாக மாகத்
திருந்திட வைத்தார் சேறைச் செந்நெறிச் செல்வ னாரே. ௧

ஓர்த்துள வாறு நோக்கி உண்மையை உணராக் குண்டர்
வார்த்தையை மெய்யென்றெண்ணி மயக்கில்வீழ்ந்தழுந்துவேனைப்
பேர்த்தெனை ஆளாக் கொண்டு பிறவிவான் பிணிகள் எல்லாம்
தீர்த்தருள் செய்தார் சேறைச் செந்நெறிச் செல்வ னாரே. ௨

ஒன்றிய தவத்து மன்னி உடையனாய் உலப்பில் காலம்
நின்றுதங் கழல்கள் ஏத்தும் நீள்சிலை விசய னுக்கு
வென்றிகொள் வேட னாகி விரும்பிவெங் கான கத்துச்
சென்றருள் செய்தார் சேறைச் செந்நெறிச் செல்வ னாரே. ௩

அஞ்சையும் அடக்கி ஆற்ற லுடையனாய் அநேக காலம்
வஞ்சமில் தவத்துள் நின்று மன்னிய பகீர தற்கு
வெஞ்சின முகங்க ளாகி விசையொடு பாயுங் கங்கை
செஞ்சடை ஏற்றார் சேறைச் செந்நெறிச் செல்வ னாரே. ௪

நிறைந்தமா மணலைக் கூப்பி நேசமோ டாவின் பாலைக்
கறந்துகொண் டாட்டக் கண்டு கறுத்ததன் தாதை தாளை
எறிந்தமா ணிக்கப் போதே எழில்கொள் சண்டீச னென்னச்
சிறந்தபே ரளித்தார் சேறைச் செந்நெறிச் செல்வ னாரே. ௫

விரித்தபல் கதிர்கொள் சூலம் வெடிபடு தமரு கங்கை
தரித்ததோர் கோல கால பயிரவ னாகி வேழம்
உரித்துமை அஞ்சக் கண்டு ஒண்திரு மணிவாய் விள்ளச்
சிரித்தருள் செய்தார் சேறைச் செந்நெறிச் செல்வ னாரே. ௬

சுற்றுமுன் இமையோர் நின்று தொழுதுதூ மலர்கள் தூவி
மற்றெமை உயக்கொள்ளென்ன மன்னுவான் புரங்கள்மூன்றும்
உ_ _ _ நொடியின் முன்னம் ஒள்ளழல் வாயின் வீழச்
செற்றருள் செய்தார் சேறைச் செந்நெறிச் செல்வ னாரே. ௭

முந்தியிவ் வுலக மெல்லாம் படைத்தவன் மாலி னோடும்
எந்தனி நாத னேஎன் றிறைஞ்சிநின் றேத்தல் செய்ய
அந்தமில் சோதி தன்னை அடிமுடி அறியா வண்ணஞ்
செந்தழ லானார் சேறைச் செந்நெறிச் செல்வ னாரே. அ-௯

ஒருவரும் நிகரி லாத ஒண்டிறல் அரக்கன் ஓடிப்
பெருவரை எடுத்த திண்தோள் பிறங்கிய முடிகள் இற்று
மருவிஎம் பெருமா னென்ன மலரடி மெள்ள வாங்கித்
திருவருள் செய்தார் சேறைச் செந்நெறிச் செல்வ னாரே. ௧௦

திருச்சிற்றம்பலம்

## 74. பொது : நினைந்த திருநேரிசை

திருச்சிற் றம்பலம்

முத்தினை மணியைப் பொன்னை முழுமுதற் பவளம் ஏய்க்குங்
கொத்தினை வயிர மாலைக் கொழுந்தினை அமரர் சூடும்
வித்தினை வேத வேள்விக் கேள்வியை விளங்க நின்ற
அத்தனை நினைந்த நெஞ்சம் அழுகிதா நினைந்த வாறே. ௧

முன்பனை உலகுக் கெல்லாம் மூர்த்தியை முனிகள் ஏத்தும்
இன்பனை இலங்கு சோதி இறைவனை அரிவை அஞ்ச
வன்பனைத் தடக்கை வேழக் களிற்றினை யுரித்த எங்கள்
அன்பனை நினைந்த நெஞ்சம் அழுகிதா நினைந்த வாறே. ௨

கரும்பினும் இனியான் தன்னைக் காய்கதிர்ச் சோதி யானை
இருங்கட லமுதந் தன்னை இறப்பொடு பிறப்பி லானைப்
பெரும்பொருட் கிளவி யானைப் பெருந்தவ முனிவ ரேத்தும்
அரும்பொனை நினைந்த நெஞ்சம் அழுகிதா நினைந்த வாறே. ௩

செருத்தனை அருத்தி செய்து செஞ்சரம் செலுத்தி யூர்மேல்
கருத்தனைக் கனக மேனிக் கடவுளைக் கருதும் வானோர்க்
கொருத்தனை யொருத்தி பாகம் பொருத்தியும் அருத்தி தீரா
நிருத்தனை நினைந்த நெஞ்சம் நேர்பட நினைந்த வாறே. ௪

கூற்றினை யுதைத்த பாதக் குழகனை மழலை வெள்ளே
றேற்றனை இமையோ ரேத்த இருஞ்சடைக் கற்றை தன்மேல்

ஆற்றனை அடிய ரேத்தும் அமுதனை அமுத யோக
நீற்றனை நினைந்த நெஞ்சம் நேர்பட நினைந்த வாறே. ரு

கருப்பனைத் தடக்கை வேழக் களிற்றினை யுரித்த கண்டன்
விருப்பனை விளங்கு சோதி வியன்கயி லாய மென்னும்
பொருப்பனைப் பொருப்பன் மங்கை பங்கனை அங்கை யேற்ற
நெருப்பனை நினைந்த நெஞ்சம் நேர்பட நினைந்த வாறே. சு

நீதியால் நினைப்பு ளானை நினைப்பவர் மனத்து ளானைச்
சாதியைச் சங்க வெண்ணீற் றண்ணலை விண்ணில் வானோர்
சோதியைத் துளக்க மில்லா விளக்கினை அளக்க லாகா
ஆதியை நினைந்த நெஞ்சம் அழகிதா நினைந்த வாறே. எ

பழகனை உலகுக் கெல்லாம் பருப்பனைப் பொருப்போ டொக்கும்
மழகளி யானை யின்தோல் மலைமகள் நடுங்கப் போர்த்த
குழகனைக் குழவித் திங்கள் குளிர்சடை மருவ வைத்த
அழகனை நினைந்த நெஞ்சம் அழகிதா நினைந்த வாறே. அ

விண்ணிடை மின்னொப் பானை மெய்ப்பெரும் பொருளொப் பானைக்
கண்ணிடை மணியொப் பானைக் கடுஇருட் சுடரொப் பானை
எண்ணிடை எண்ண லாகா இருவரை வெருவ நீண்ட
அண்ணலை நினைந்த நெஞ்சம் அழகிதா நினைந்த வாறே. கூ

உரவனைத் திரண்ட திண்தோள் அரக்கனை ஊன்றி மூன்றூர்
நிரவனை நிமிர்ந்த சோதி நீள்முடி அமரர் தங்கள்
குரவனைக் குளிர்வெண் திங்கள் சடையிடைப் பொதியும் ஐவாய்
அரவனை நினைந்த நெஞ்சம் அழகிதா நினைந்த வாறே. க௦

திருச்சிற்றம்பலம்

---

## 75. பொது : தனித் திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

தொண்டனேன் பட்ட தென்னே தூயகா விரியில் நன்னீர்
கொண்டிருக் கோதி ஆட்டிக் குங்குமக் குழம்பு சாத்தி
இண்டைகொண் டேற நோக்கி ஈசனை எம்பி ரானைக்
கண்டனக் கண்டி ராதே காலத்தைக் கழித்த வாறே. க

பின்னிலேன் முன்னி லேன்நான் பிறப்பறுத் தருள்செய் வானே
என்னிலேன் நாயி னேன்நான் இளங்கதிர்ப் பயலைத் திங்கள்
சின்னிலா எறிக்குஞ் சென்னிச் சிவபுரத் தமரர் ஏறே
நின்னலால் களைக ணாரே நீறுசேர் அகலத் தானே. உ

கள்ளனேன் கள்ளத்தொண்டாய்க் காலத்தைக் கழித்துப்போக்கித்
தெள்ளியே னாகி நின்று தேடினேன் நாடிக் கண்டேன்
உள்குவார் உள்கிற் றெல்லாம் உடனிருந் தறிதி யென்று
வெள்கினேன் வெள்கி நானும் விலாவிறச் சிரித்திட் டேனே.

உடம்பெனும் மனைய கத்துள் உள்ளமே தகளி யாக
மடம்படும் உணர்நெய் யட்டி உயிரெனுந் திரிம யக்கி
இடம்படு ஞானத் தீயால் எரிகொள இருந்து நோக்கில்
கடம்பமர் காளை தாதை கழலடி காண லாமே. ச

வஞ்சப்பெண் ணரங்கு கோயில் வாளெயிற் றரவந் துஞ்சா
வஞ்சப்பெண் ணிருந்த சூழல் வான்தவழ் மதியந் தோயும்
வஞ்சப்பெண் வாழ்க்கை யாளன் வாழ்வினை வாழ லுற்று
வஞ்சப்பெண் ணுறக்க மானேன் வஞ்சனேன் என்செய் கேனே.

உள்குவார் உள்ளத் தானை உணர்வெனும் பெருமை யானை
உள்கினேன் நானுங் காண்பான் உருகினேன் ஊறி ஊறி
எள்கினேன் எந்தை பெம்மான் இருதலை மின்னு கின்ற
கொள்ளிமேல் எறும்பென் னுள்ளம் எங்ஙனங் கூடு மாறே. சு

மோத்தையைக் கண்ட காக்கை போலவல் வினைகள் மொய்த்துன்
வார்த்தையைப் பேச வொட்டா மயக்கநான் மயங்கு கின்றேன்
சீத்தையைச் சிதம்பு தன்னைச் செடிகொள்நோய் வடிவொன் றில்லா
ஊத்தையைக் கழிக்கும் வண்ணம் உணர்வுதா உலக மூர்த்தி.

அங்கத்தை மண்ணுக் காக்கி ஆர்வத்தை உனக்கே தந்து
பங்கத்தைப் போக மாற்றிப் பாவித்தேன் பரமா நின்னைச்
சங்கொத்த மேனிச் செல்வா சாதல்நாள் நாயேன் உன்னை
எங்குற்றாய் என்ற போதால் இங்குற்றேன் என்கண் டாயே. அ

வெள்ளநீர்ச் சடைய னார்தாம் வினவுவார் போல வந்தென்
உள்ளமே புகுந்து நின்றார்க் குறங்குநான் புடைகள் போந்து

கள்ளரோ புகுந்தீர் என்னக் கலந்துதான் நோக்கி நக்கு
வெள்ளரோம் என்று நின்றார் விளங்கிளம் பிறைய னாரே. கூ

பெருவிரல் இறைதான் ஊன்றப் பிறையெயி றிலங்க அங்காந்
தருவரை அனைய தோளான் அரக்கன்அன் றலறி வீழ்ந்தான்
இருவரும் ஒருவ னாய உருவமங் குடைய வள்ளல்
திருவடி சுமந்து கொண்டு காண்கநான் திரியு மாறே. கய

*திருச்சிற்றம்பலம்*

---

## 76. பொது : தனித் திருநேரிசை

*திருச்சிற்றம்பலம்*

மருளவா மனத்த னாகி மயங்கினேன் மதியி லாதேன்
இருளவா அறுக்கும் எந்தை இணையடி நீழல் என்னும்
அருளவாப் பெறுத லின்றி அஞ்சிநான் அலமந் தேற்குப்
பொருளவாத் தந்த வாறே போதுபோய்ப் புலர்ந்த தன்றே. க

மெய்ம்மையாம் உழவைச் செய்து விருப்பெனும் வித்தை வித்திப்
பொய்ம்மையாங் களையைவாங்கிப்பொறையெனும்நீரைப் பாய்ச்சித்
தம்மையும் நோக்கிக் கண்டு தகவெனும் வேலி யிட்டுச்
செம்மையுள் நிற்ப ராகிற் சிவகதி விளையு மன்றே. உ

எம்பிரான் என்ற தேகொண் டென்னுளே புகுந்துநின் றிங்(கு)
எம்பிரான் ஆட்ட ஆடி என்னுளே உழிதர் வேனை
எம்பிரான் என்னைப் பின்னைத் தன்னுளே கரக்கும் என்றால்
எம்பிரான் என்னின் அல்லால் என்செய்கேன் ஏழை யேனே.

காயமே கோயி லாகக் கடிமனம் அடிமை யாக
வாய்மையே தூய்மை யாக மனமணி இலிங்க மாக
நேயமே நெய்யும் பாலா நிறையநீர் அமைய ஆட்டிப்
பூசனை ஈச னார்க்குப் போற்றவிக் காட்டி னோமே. ச

வஞ்சகப் புலைய னேனை வழியறத் தொண்டிற் பூட்டி
அஞ்சலென் றாண்டு கொண்டாய் அதுவுநின் பெருமை யன்றே
நெஞ்சகங் கனிய மாட்டேன் நின்னையுள் வைக்க மாட்டேன்
நஞ்சிடங் கொண்ட கண்டா என்னென நன்மை தானே. ரு

நாயினுங் கடைப்பட் டேனை நன்னெறி காட்டி ஆண்டாய்
ஆயிரம் அரவம் ஆர்த்த அமுதனே அமுதம் ஒத்து
நீயுமென் நெஞ்சின் உள்ளே நிலாவிணாய் நிலாவி நிற்க
நோயவை சாரு மாகில் நோக்கிநீ அருள்செய் வாயே. சு

விள்ளத்தான் ஒன்று மாட்டேன் விருப்பெனும் வேட்கை யாலே
வள்ளத்தேன் போலே நுன்னை வாய்மடுத் துண்டி டாமே
உள்ளத்தே நிற்றி யேனும் உயிர்ப்புளே வருதி யேனுங்
கள்ளத்தே நிற்றி அம்மா எங்ஙனங் காணு மாறே. எ

ஆசைவன் பாசம் எய்தி அங்குற்றேன் இங்குற் றேனாய்
ஊசலாட் டுண்டு வாளா உழந்துநான் உழித ராமே
தேசனே தேச மூர்த்தீ திருமறைக் காடு மேய
ஈசனே உன்றன் பாதம் ஏத்துமா றருளெம் மானே. அ

நிறைவிலேன் நேச மில்லேன் நினைவிலேன் வினையின் பாச
மறைவிலே புறப்பட் டேறும் வகையெனக் கருள்என் எம்மான்
சிறையிலேன் செய்வ தென்னே திருவடி பரவி ஏத்தக்
குறைவிலேன் குற்றந் தீராய் கொன்றைசேர் சடையி னானே.

நடுவிலாக் காலன் வந்து நணுகும்போ தறிய வொண்ணா
அடுவன அஞ்சு பூதம் அவைதமக் காற்றல் ஆகேன்
படுவன பலவுங் குற்றம் பாங்கிலா மனிதர் வாழ்க்கை
கெடுவதிப் பிறவி சீசீ கிளரொளிச் சடையி னீரே. க0

திருச்சிற்றம்பலம்

## 77. பொது : தனித் திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

சுடுப்பகல் நட்டம் ஆடிக் கையில்ஓர் கபாலம் ஏந்தி
இடும்பலிக் கில்லந் தோறும் உழிதரும் இறைவ னீரே
நெடும்பொறை மலையர் பாவை நேரிழை நெறிமென் கூந்தற்
கொடுங்குழை புகுந்த அன்றுங் கோவணம் அரைய தேயோ.

கோவணம் உடுத்த வாறுங் கோளர வசைத்த வாறுந்
தீவணச் சாம்பர் பூசித் திருவுரு இருந்த வாறும்

பூவணக் கிழவ னாரைப் புலியுரி அரைய னாரை
ஏவணச் சிலையி னாரை யாவரே எழுது வாரே. உ

விளக்கினார் பெற்ற இன்பம் மெழுக்கினாற் பதிற்றி யாகும்
துளக்கினன் மலர்தொ டுத்தால் தூயவிண் ணேற லாகும்
விளக்கிட்டார் பேறு சொல்லின் மெய்ந்நெறி ஞான மாகும்
அளப்பில கீதஞ் சொன்னார்க் கடிகள்தாம் அருளு மாறே. ங

சந்திரற் சடையில் வைத்த சங்கரன் சாம வேதி
அந்தரத் தமரர் பெம்மான் ஆனல்வெள் ளூர்தி யான்றன்
மந்திரம் நமச்சி வாய ஆகநீ றணியப் பெற்றால்
வெந்தறும் வினையும் நோயும் வெவ்வழல் விறகிட் டன்றே. ச

புள்ளுவர் ஐவர் கள்வர் புனத்திடைப் புகுந்து நின்று
துள்ளுவர் சூறை கொள்வர் தூநெறி விளைய வொட்டார்
முள்ளுடை யவர்கள் தம்மை முக்கணான் பாத நீழல்
உள்ளிடை மறைந்து நின்றங் குணர்வினால் எய்ய லாமே. ரு

தொண்டனேன் பிறந்து வாளாத் தொல்வினைக் குழியில் வீழ்ந்து
பிண்டமே சுமந்து நாளும் பெரியதோர் அவாவிற் பட்டேன்
அண்டனே அமரர் கோவே அறிவனே அஞ்சல் என்னாய்
தெண்டிரைக் கங்கை சூடுந் திகழ்தரு சடையி னானே. சு

பாறினாய் பாவி நெஞ்சே பன்றிபோல் அளற்றிற் பட்டுத்
தேறிநீ நினைதி யாயிற் சிவகதி திண்ண மாகும்
ஊறலே உவர்ப்பு நாறி உதிரமே ஒழுகும் வாசல்
கூறையால் மூடக் கண்டு கோலமாக் கருதி னாயே. எ-அ-கூ

உய்த்தகால் உதயத் தும்பர் உமையவள் நடுக்கந் தீர
வைத்தகால் அரக்க னோதன் வான்முடி தனக்கு நேர்ந்தான்
மொய்த்தகான் முகிழ்வெண் திங்கள் மூர்த்திஎன் உச்சி தன்மேல்
வைத்தகால் வருந்து மென்று வாடிநான் ஒடுங்கி னேனே. கo

திருச்சிற்றம்பலம்

## 78. பொது : துறந்த திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

வென்றிலேன் புலன்கள் ஐந்தும் வென்றவர் வளாகந் தன்னுள்
சென்றிலேன் ஆத லாலே செந்நெறி அதற்குச் சேயேன்
நின்றுளே துளும்பு கின்றேன் நீசனேன் ஈச னேயோ
இன்றுளேன் நாளை இல்லேன் என்செய்வான் தோன்றி னேனே. ௧

கற்றிலேன் கலைகள் ஞானங் கற்றவர் தங்க ளோடும்
உற்றிலேன் ஆத லாலே உணர்வுக்குஞ் சேயன் ஆனேன்
பெற்றிலேன் பெருந்த டங்கண் பேதைமார் தமக்கும் பொல்லேன்
எற்றுளேன் இறைவ னேநான் என்செய்வான் தோன்றி னேனே. ௨

மாட்டினேன் மனத்தை முன்னே மறுமையை உணர மாட்டேன்
மூட்டிநான் முன்னை நாளே முதல்வனை வணங்க மாட்டேன்
பாட்டினாய் போல நின்று பற்றதாம் பாவந் தன்னை
ஈட்டினேன் களைய மாட்டேன் என்செய்வான் தோன்றி னேனே. ௩

கரைக்கடந் தோதம் ஏறுங் கடல்விடம் உண்ட கண்டன்
உரைக்கடந் தோது நீர்மை யுணர்ந்திலேன் ஆத லாலே
அரைக்கிடந் தசையு நாகம் அசைப்பனே இன்ப வாழ்க்கைக்
கிரைக்கடைந் துருகு கின்றேன் என்செய்வான் தோன்றி னேனே.

செம்மைவெண் ணீறு பூசுஞ் சிவன்அவன் தேவ தேவன்
வெம்மைநோய் வினைகள் தீர்க்கும் விகிர்தனுக் கார்வ மெய்தி
அம்மைநின் றடிமைசெய்யா வடிவிலா முடிவில் வாழ்க்கைக்(கு)
இம்மைநின் றுருகு கின்றேன் என்செய்வான் தோன்றி னேனே. ௫

பேச்சோடு பேச்சுக் கெல்லாம் பிறர்தமைப் புறமே பேசக்
கூச்சிலேன் ஆத லாலே கொடுமையை விடுமா றோரேன்
நாச்சொலி நாளும் மூர்த்தி நன்மையை உணர மாட்டேன்
ஏச்சுளே நின்று மெய்யே என்செய்வான் தோன்றி னேனே. ௬

தேசனைத் தேச மாகுந் திருமாலோர் பங்கன் தன்னைப்
பூசனைப் புனிதன் தன்னைப் புணரும்புண் டரிகத் தானை
நேசனை நெருப்பன் றன்னை நிவஞ்சகத் தகன்ற செம்மை
ஈசனை யறிய மாட்டேன் என்செய்வான் தோன்றி னேனே.

விளைக்கின்ற வினையை நோக்கி வெண்மயிர் விரவி மேலும்
முளைக்கின்ற வினையைப் போக முயல்கிலே னியல வெள்ளம்
திளைக்கின்ற முடியி னான்றன் திருவடி பரவ மாட்டா(து)
இளைக்கின்றேன் இருமி ஊன்றி என்செய்வான் தோன்றி னேனே. அ

விளைவறி விலாமை யாலே வேதனைக் குழியில் ஆழ்ந்து
களைகணும் இல்லேன் எந்தாய் காமரங் கற்றும் இல்லேன்
தளையவிழ் கோதை நல்லார் தங்களோ டின்பம் எய்த
இளையனும் அல்லேன் எந்தாய் என்செய்வான் தோன்றி னேனே.

வெட்டன வுடைய னாகி வீரத்தால் மலையெ டுத்த
துட்டனைத் துட்டுத் தீர்த்துச் சுவைபடக் கீதங் கேட்ட
அட்டமா மூர்த்தி யாய ஆதியை ஓதி நாளும்
எட்டனை எட்ட மாட்டேன் என்செய்வான் தோன்றி னேனே. க0

திருச்சிற்றம்பலம்

---

## 79. பொது : குறைந்த திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

தம்மானங் காப்ப தாகித் தையலார் வலையுள் ஆழ்ந்து
அம்மானை அமுதன் தன்னை ஆதியை அந்த மாய
செம்மான ஒளிகொள் மேனிச் சிந்தையுள் ஒன்றி நின்ற
எம்மானை நினையமாட்டேன் என்செய்வான் தோன்றினேனே.

மக்களே மணந்த தாரம் அவ்வயிற் றவரை யோம்பும்
சிக்குளே யழுந்தி ஈசன் திறம்படேன் தவமதோரேன்
கொப்புளே போலத் தோன்றி அதனுளே மறையக் கண்டும்
இக்களே பரத்தை யோம்ப என்செய்வான் தோன்றி னேனே.

கூழையேன் ஆக மாட்டேன் கொடுவினைக் குழியில் வீழ்ந்து
ஏழின் இன் னிசையி னாலும் இறைவனை யேத்த மாட்டேன்
மாழையொண்கண்ணினல்லமடந்தைமார்தமக்கும்போல்லேன்
ஏழையே னாகி நாளும் என்செய்வான் தோன்றி னேனே. ௩

முன்னையென் வினையி னாலே மூர்த்தியை நினைய மாட்டேன்
பின்னைநான் பித்த னாகிப் பிதற்றுவன் பேதை யேன்நான்

என்னுளே மன்னி நின்ற சீர்மைய தாயி ஞனே
என்னுளே நினைய மாட்டேன் என்செய்வான் தோன்றி னேனே.

கறையணி கண்டன் தன்னைக் காமரங் கற்றும் இல்லேன்
பிறைநுதற் பேதை மாதர் பெய்வளை யார்க்கு மல்லேன்
மறைநவில் நாவி ஞனை மன்னிநின் றிறைஞ்சி நாளும்
இறையேயும் ஏத்தமாட்டேன் என்செய்வான் தோன்றி னேனே. ௯

வளைத்துநின் றைவர் கள்வர் வந்தெனை நடுக்கஞ் செய்யத்
தளைத்துவைத் துலையை ஏற்றித் தழல்எரி மடுத்த நீரில்
திளைத்துநின் றாடு கின்ற ஆமைபோல் தெளிவி லாதேன்
இளைத்துநின் றாடுகின்றேன் என்செய்வான் தோன்றி னேனே. கூ-௰

திருச்சிற்றம்பலம்

---

## 80. கோயில் : திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

பாளை யுடைக்கமு கோங்கிப்பன் மாடம் நெருங்கியெங்கும்
வாளை யுடைப்புனல் வந்தெறி வாழ்வயல் தில்லைதன்னுள்
ஆள வுடைக்கழற் சிற்றம் பலத்தரன் ஆடல்கண்டால் [னே.
பீளை யுடைக்கண்க ளாற்பின்னைப் பேய்த்தொண்டர் காண்பதென்

பொருவிடை யொன்றுடைப் புண்ணிய மூர்த்தி புலியதளன்
உருவுடை யம்மலை மங்கை மணாளன் உலகுக்கெல்லாம்
திருவுடை அந்தணர் வாழ்கின்ற தில்லைச்சிற் றம்பலவன்
திருவடி யைக்கண்ட கண்கொண்டு மற்றினிக் காண்பதென்னே.

தொடுத்த மலரொடு தூபமுஞ் சாந்துங்கொண் டெப்பொழுதும்
அடுத்து வணங்கும் அயனொடு மாலுக்குங் காண்பரியான்
பொடிக்கொண் டணிந்து பொன்னா கியதில்லைச் சிற்றம்பலவன்
உடுத்த துகில்கண்ட கண்கொண்டு மற்றினிக் காண்பதென்னே. ௩

வைச்ச பொருள்நமக் காகுமென் றெண்ணி நமச்சிவாய
அச்ச மொழிந்தேன் அணிதில்லை அம்பலத் தாடுகின்ற
பிச்சன் பிறப்பிலி பேர்நந்தி உந்தியின் மேலசைத்த
கச்சின் அழகுகண் டாற்பின்னைக் கண்கொண்டு காண்பதென்னே.

செய்ஞ்ஞின்ற நீல மலர்கின்ற தில்லைச்சிற் றம்பலவன்
மைஞ்ஞின்ற வொண்கண் மலைமகள் கண்டு மகிழ்ந்து நிற்க
நெய்ஞ்ஞின் றெரியும் விளக்கொத்த நீல மணிமிடற்றான்
கைஞ்ஞின்றஆடல்கண்டாற்பின்னைக்கண்கொண்டுகாண்பதென்னே

ஊனத்தை நீக்கி உலகறிய என்னை யாட்கொண்டவன்
தேனொத் தெனக்கினி யான்தில்லைச் சிற்றம் பலவன்எங்கோன்
வானத் தவருய்ய வன்னஞ்சை உண்டகண் டத்திலங்கும்
ஏனத் தெயிறுகண் டாற்பின்னைக் கண்கொண்டு காண்பதென்னே.

தெரித்த கணையால் திரிபுர மூன்றுஞ்செந் தீயின்மூழ்க
எரித்த இறைவன் இமையவர் கோமான் இணையடிகள்
தரித்த மனத்தவர் வாழ்கின்ற தில்லைச்சிற் றம்பலவன்
சிரித்த முகங்கண்ட கண்கொண்டு மற்றினிக் காண்ப தென்னே. எ

சுற்று மமரர் சுரபதி நின்திருப் பாதமல்லால்
பற்றொன் றிலோமென் றழைப்பப் பரவையுள் நஞ்சையுண்டான்
செற்றங் கனங்களைத் தீவிழித் தான்தில்லை யம்பலவன்
நெற்றியிற் கண்கண்ட கண்கொண்டு மற்றினிக் காண்பதென்னே.

சித்தத் தெழுந்த செழுங்கம லத்தன்ன சேவடிகள்
வைத்த மனத்தவர் வாழ்கின்ற தில்லைச்சிற் றம்பலவன்
முத்தும் வயிரமும் மாணிக்கந் தன்னுள் விளங்கியதூ
மத்த மலர்கண்ட கண்கொண்டு மற்றினிக் காண்பதென்னே.

தருக்கு மிகுத்துத்தன் தோள்வலி யுன்னித் தடவரையை
வரைக்கை களாலெடுத் தார்ப்ப மலைமகள் கோன்சிரித்து
அரக்கன் மணிமுடி பத்தும் அணிதில்லை யம்பலவன்
நெருக்கி மிதித்த விரல்கண்ட கண்கொண்டு காண்ப தென்னே. கO

திருச்சிற்றம்பலம்

---

## 81. கோயில் : திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

கருநட்ட கண்டனை அண்டத் தலைவனைக் கற்பகத்தைச்
செருநட்ட மும்மதில் எய்யவல் லானைச்செந் தீமுழங்கத்
திருநட்ட மாடியைத் தில்லைக் கிறையைச்சிற் றம்பலத்துப்
பெருநட்ட மாடியை வானவர் கோனென்று வாழ்த்துவனே.

